மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

மாலை—20 




உரையாசிரியர்
ஆங்கீரஸ S வேங்கடேச சர்மா
சங்கரனடிமை

15185

5-2

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை

## (சம்பந்தர், அப்பர், சுந்தரர் அருளிச் செய்த தேவாரத் திருப்பதிக வெளியீடு)

## மாலை—20


உரையாசிரியர் :

சிவபுராண ஞானபூஜகர், சாஸ்த்ர பிரசார பூஷணம்,
சிவபுராணக் காவலர், சிவபுராணச் சக்கரவர்த்தி

**ஆங்கீரஸ சு. வேங்கடேச சர்மா**

(சங்கரன் அடிமை)







பிரசுரம் :

**ஆங்கிரஸ சு. வேங்கடேச சர்மா**

5, டெலிபோஸ்ட் காலனி குறுக்குத் தெரு,
மேலமாம்பலம், சென்னை-600 033.

உரிமை பதிவு] 7-9-1986 [விலை ரூ. 4-00.

## விநாயகர் துதி



திருச்சிற்றம்பலம்

பிடியதன் உருஉமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடும் அவரிடர்
கடிகண பதிவர அருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை இறையே.

திருச்சிற்றம்பலம்

5-2

உ

## சைவ சமயாசாரியர்

# நால்வர் துதி






| | | | |
|---|---|---|---|
| திருஞான சம்பந்தர் | திருநாவுக் கரசர் | சுந்தர மூர்த்திகள் | மாணிக்க வாசகர் |

பூழியர்கோன் வெப்பொழித்த புகலியர்கோன் கழல்போற்றி
ஆழிமிசைக் கல்மிதப்பில் அணைந்தபிரான் அடிபோற்றி
வாழிதிரு நாவலூர் வன்றொண்டர் பதம் போற்றி
ஊழிமலி திருவாத வூரர்திருத் தாள்போற்றி.

சொற்கோவும் தோணிபுரத் தோன்றலும் நம்சுந்தரனும்
சிற்கோல வாதவூர்த் தேசிகனும்-முற்கோலி
வந்திலரேல் நீறெங்கே மாமறைநூல் தானெங்கே
எந்தைபிரான் ஐந்தெழுத்தெங் கே.



# திருஞானசம்பந்தர்



சுந்தரப்பொன் தோணிமிசை இருந்தபிரான்
உடனணைந்த துணைவியாகும் பைந்தொடியாள்
இருமுலையின் பாலரு மதுரமொழிப்
பவளவாயர், வையமெலாம் உய்யவரு
மறைச்சிறுவர், அம்பிகையளித்த ஞானம்
அகிலமுய்யக் கொண்ட பெருந்தகையார்
திருஞானசம்பந்தர்

5-2

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# உரையாசிரியர் பணிவுரை

திருச்சிற்றம்பலம்

அணங்கமர் யாழ்முரித் தாண்பனை பெண்பனை ஆக்கியமண்
கணங்கழு ஏற்றிக் கடுவிடந் தீர்த்துக் கதவடைத்துப்
பிணங்கலை நீரெதிர் ஓடஞ் செலுத்தின வெண்பிறையோ(டு)
இணங்கிய மாடச் சிரபுரத் தான்றன் இருந்தமிழே.

திருச்சிற்றம்பலம்

—ஆளுடைய பிள்ளையார் திருவந்தாதி-39
(நம்பியாண்டார் நம்பிகளருளியது, 11-ம் திருமுறை)

திருச்சிரபுரம் என்றொரு பெயரையுடைய சீகாழியில் அவதரித்தவர் திருஞானசம்பந்தர். அம்பிகை அளித்த ஞானப் பாலே அவர்தம் வாக்கினின்றும் ஞானத்தமிழ் மாலைகளாக வந்தன. அவரது ஞானத்தமிழின் திறம் மேலேயுள்ள திருப் பாடலில் போற்றப்பட்டுள்ளது. அந்த ஞானத்தமிழ் திருநீல கண்ட யாழ்ப்பாணரின் யாழினை முரிக்கும்படிச் செய்தது. திருவோத்தூரில் காய்க்காத ஆண்பனையைக் குலைதள்ளும் பெண் பனையாக மாற்றியது. மதுரையில் ஜுரவாதம், அனல்வாதம், புனல்வாதம் என்னும் மூவகையான வாதங்களிலும் வெற்றி பெற்றுச் சமணர் குழுவைக் கழுவேறும்படிச் செய்தது. திருமருகல் என்னும் ஊரில் பாம்பின் விடத்தால் உயிரிழந்த வணிகனை விடம் நீங்கி உயிர்பெறச் செய்தது. திருமறைக் காடு என்னும் வேதாரணியத் தலத்திலே திறந்த கதவை மூடும்படிச் செய்தது. திருக்கொள்ளம்பூதூரில் இருகரையும் பொருது ஓடும் ஆற்று வெள்ளத்தில் ஓடக்காரர்கள் ஓடங்களைச் செலுத்தவியலாது விட்டிருக்க, அவ்வெள்ளத்தைக் கடக்கு மாறு ஓடங்களைச் செலுத்தியது. இவையெல்லாஞ் செய்தது

திருஞானசம்பந்தப் பெருமானின் ஞானத்தமிழ் மாலையேயாம் என்று நம்பியாண்டார் நம்பிகள் போற்றிப்பாடியுள்ள இத் தமிழ் மாலையினை உரையுடன் வெளியிடும் புண்ணியம் பெற்ற நாம் பிள்ளையாரது 4வது தலயாத்திரைக்குப் பிறகு சீகாழி யில் தங்கியிருந்த போது பாடியருளியவைகளையும், பாடிய வர லாறும் காலமும் தெரியாத பதிகங்களையும் வெளியிடும் முறையை மேற்கொண்டு சென்ற 19வது தமிழ்மாலையில் அவற்றை முடித்து, இந்த 20வது தமிழ்மாலையில் திருஞான சம்பந்தரின் ஐந்தாவது தலயாத்திரைப் பதிகங்களைத் தொடங்கியுள்ளோம்.

ஐந்தாவது தலயாத்திரையில் பிள்ளையார் முதன் முத லாகத் தரிசித்த தலம் திருக்கண்ணார்கோயில்ஆகும். எனவே திருக்கண்ணார்கோயில் பதிகத்தில் ஆரம்பித்து, அதைத் தொடர்ந்து திருக்கடைமுடி, திருப்புள்ளிருக்குவேளூர், திரு நின்றியூர், திருப்புன்கூர், திருஅன்னியூர், திருமணஞ்சேரி, (திருத்துருத்தியும்) திருவேள்விக்குடியும், திருக்கோடிகா, திரு மங்கலக்குடி ஆகிய பத்து திருப்பதிகங்களை இந்த 20வது தமிழ்மாலையில் பிரசுரித்துள்ளோம். இத்தலங்களைப் பற்றிய குறிப்புகளும், கிடைத்தவரையில் படங்களும் கொடுத்துள் ளோம். இப்படங்களுக்குரிய புகைப்பட நெகடிவ்களைக் (Negatives) கொடுத்துதவிய திரு. சிவபாதசேகரன் அவர் களுக்கு அம்மையப்பர் திருவருள் சிறக்குமாறு பிரார்த்திக் கிறோம். வழக்கம் போல இத்தமிழ்மாலைக்கும் தமது அரிய குறிப்புகளையளித்து உதவிய இராணிப்பேட்டை, நக்கீரன் வழியடிமை, புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர் களுக்கு நமது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள் கிறோம்.

திருவருள் துணை கூட்டியதால் நமது மூவர் தமிழ்மாலை 20, 21, 22 ஆக மூன்று மாலைகளுக்கான முழுச்செலவையும் தமது நன்கொடையாக அளித்த பெங்களூர் வள்ளல் ஸ்ரீமான் M V. ஜயராமன், M A. அவர்கட்கு எவ்வளவு நன்றிகள் சொன்னாலும் போதாது. இப்பெருமகனாரது திருவுருவப்படத்

தையும், இவர்களைப் பற்றிய சிறு குறிப்பினையும் இம்மலரில் பிரசுரித்து நமது நன்றிகளைப் புலப்படுத்தியுள்ளோம். தமது படமோ, தம்மைப்பற்றிய விரிவோ ஏதும் வேண்டாமெனக் கூறிப் படமும் குறிப்புகளும் இவ்வள்ளற் பெருமான் அளிக்க மறுத்துவிட்டபோதிலும், நாம் முயன்று அவரது திருமகனார் ஸ்ரீமான் மோகன் அவர்கள் மூலம் படத்தினைப் பெற்று இந்த மாலையில் வெளியிடுகிறோம். தொடர்ந்து 21, 22வது மாலைகளிலும் வள்ளல் ஸ்ரீமான் M. V. ஜயராமன் அவர்களது படம் பிரசுரிக்கப்படும். வள்ளல் ஸ்ரீமான் M. V. ஜயராமன் அவர்களுடன் நம்மைத் தக்கப்படி அறிமுகப்படுத்தி இப்பேருதவி கிடைப்பதற்குத் திருவருள் துணையால் காரணமாக இருந்தவர் பெங்களூர் Dr. A. N. ஆறுமுகம், M. D , என்ற பெரியார் ஆவார். மதிப்புக்குரிய டாக்டர் அவர்களுக்கும் நமது மனப்பூர்வமான நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

"எல்லாம் எமையாளும் ஈசன் செயல்"

சிவம்

## பொருளடக்கம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



## ஸமர்ப்பணம்

ஓம் த்ரிலோகேசாய நம:

சிவபிரானின் அருச்சனைக்குரிய சிவாஷ்டோத்தர சதநாமங்கள் எனப்படும் 108 திருநாமங்களில் 20வது திருநாமம் த்ரிலோகேசன் (த்ரிலோகேச:) என்பதாகும். த்ரிலோகேசன் என்ற சொல்லுக்கு மூவுலகுக்கும் தலைவன் என்பது பொருளாகும். மூவுலகம் என்பது ஸ்வர்க்க, மத்ய, பாதாள (மேல், நடு, கீழ்) எனப்படும் மூவகையான உலகத்தைக் குறிக்கும். உலகங்கள் மேல் ஏழு, கீழ் ஏழு ஆக பதினான்கு எனவுங் கூறப்படும். இந்தப் பதினான்கு உலகங்களும் மேல், நடு, கீழ் எனப் படும் மூவகையுள் அடங்கும். எனவே இறைவர் பதினான்கு உலகங்களுக்கும் தலைவர் என்று கூறிய தாயிற்று.

இத்தகைய பொருட்செறிவு பெற்ற ஓம் த்ரி லோகேசாய நம: என்ற 20வது திருநாம மந்திரத்தால் மூவகையாகிய பதினான்கு உலகங்களுக்கும் ஒரே இறைவராகிய சிவபெருமானின் எழிலார் சேவடிகளை இறைஞ்சி இந்த 20வது ஞானத்தமிழ் மாலையினை ஸமர்ப் பிக்கும் மேலான சிவபுண்ணியத்தைப் பெறுகின்றேன்.

ஆங்கீரஸ S. வேங்கடேச சர்மா
உரையாசிரியர்

சிவம்



அறப்பெருஞ்செம்மல்

புலவர் திரு ம. வே. ஜயராமன், M A.

அவர்கள்

"பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீல மணிமிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே" —ஔவையார்

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

அறப்பெருஞ்செம்மல்

# திரு. ம. வே. ஜயராமன் நீடு வாழ்க.

"ஈபவர்க்கு அருளும் வைத்தார்" (அப்பர்)

"ஈவார்மேல் நிற்கும் புகழ்" (திருக்குறள்)

"ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதிய மில்லை உயிர்க்கு" (திருக்குறள்)

"செல்வத்தின் பயனே ஈதல்" (புறநானூறு)

திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் சங்கத் தமிழ் பயின்று புலவர் பட்டம் பெற்ற வள்ளல், அறப்பெருஞ் செம்மல், திரு ம. வே. ஜயராமன் அவர்கள் மேலே காட்டிய வண்டமிழ் உரைகளின் அருமை உணர்ந்து அதற்கேற்ப வாழும் பெற்றியினராவர். தமிழ்ப் புலமையோடு இசைப் புலமையும் பெற்றவர். திருப்பனந்தாளுக்கு அண்மையில் உள்ள மணிக்குடி என்னுமூரில் திரு. வேங்கடராமய்யர் மங்களாம்பாள் தம்பதியர்க்கு அரும்பெறல் மகவாய்த் தோன்றியவர். மகன் தந்தைக்காற்றும் உதவியெனத் திருக்குறள் கூறும் உதவியை (இவன் தந்தை என்நோற்ருன்கொல் எனும் சொல்) தந்தைக்குச் செய்தவர். ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீசங்கராசாரிய சுவாமிகள், திருக் கயிலாய பரம்பரைத் திருத்தருமை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ குரு மஹா சந்நிதானம் அவர்கள், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் அதிபர் ஸ்ரீலஸ்ரீ எஜமான் சுவாமிகள் ஆகியோரிடம் மிக்க ஈடுபாடு கொண்டவர்.

இப்பெரியார், கர்நாடக மாநிலத் தலைநகரான பெங்களூர் மாநகரில் "வேங்கடேசா கல்விக் கழகம்" என்ற ஸ்தாபனத்தை நிறுவி அதன் மூலம் பத்துக்கும் மேற்பட்ட கல்வி நிறுவனங்களை ஒன்றன் பின் ஒன்ருகத் தோற்றுவித்து அவைகளைக்

கண்ணே போல் போற்றித் திறம்படப் பாதுகாத்து வருகின்ருர். தாம் பெற்ற செல்வத்தின் பயன் ஈதலே என்பதை உறுதியாக நம்பி, கல்விப்பணிகளுக்கும் பிற அறப்பணிகளுக்கும், திருக்கோயில் பணிகளுக்கும் இவர் வாரிவழங்கியுள்ள பொருள் கணக்கிலடங்காததாகும். வலது கை கொடுப்பது இடது கைக்குத் தெரியாத வண்ணம் இவரது கொடைத் திறம் அமைந்ததை எங்ஙனம் புகழவல்லோம்?

"பாரி பாரி என்றுபல வேத்தி
ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்
பாரி ஒருவனு மல்லன
மாரியு முண்டு ஈண்டுலகு புரப்பதுவே"
(புறநானூறு)

என்ற கபிலரின் பாடலை நோக்கும் போது

"மாரி ஒன்றுதான் உளதோ மணிக்குடி
வேங்கட ஜய ராமனும் உளனே"

என்று அல்லவோ கூறத்தோன்றுகிறது!

இத்தகு சிறப்புடைய இவ்வள்ளற் பெருமகனுர் நமது மூவர் தமிழ் மாலை 20, 21, 22. ஆக மூன்று தமிழ் மாலைகளுக்கும் ஆகும் முழுமையான பொருள் செலவையும் தமது நன் கொடையாக வழங்கியுள்ளார் என்பதைப் பெருமகிழ்ச்சியுடனும் நன்றியுடனும தெரிவித்துக் கொள்கிருேம். இத்தகைய காலத்தினுற்செய்த பேருதவிக்கு நாம் என்ன கைம்மாறுசெய்ய வல்லோம்? அறப்பெருஞ் செம்மல் திரு. ம. வே. ஜயராமன் அவர்களும் அவர்களது குடும்பமும் புலவர்கள் போற்றும் பதினுறு பேறுகளும் பெற்றுச் சிறந்து நீடூழி வாழவேண்டுமென உலகத் தாய் தந்தையர்களான பார்வதீ-பரமேசுவரர்களைப் பிரார்த்திக்கின்ருேம்.

"பால்புரை பிறைநுதற் பொலிந்த சென்னி
நீலமணி மிடற்று ஒருவன் போல
மன்னுக பெரும நீயே" —ஔவையார்

வாழ்க அறப்பெருஞ்செம்மல்! வளர்க அவர்தம் புகழ்!!
வாழ்க அவர்கள் குடும்பம்.

சிவம்

உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# இப்பதிப்பில் வந்துள்ள தலங்களின் விசேடங்கள்



## 1. திருக்கண்ணார்கோயில்

காவிரி வடகரைத் தலங்களில் 17வதான இத்தலம் இப்போது குறுமாணக்குடி என வழங்கப்படுகிறது. அகலிகை யென்பாளை அடைய விரும்பிய காரணத்தால், அவளது கணவர் கௌதம முனிவரிடம் இந்திரன் பெற்ற சாபம் மாறுபாடடைந்து அவன் ஆயிரங்கண்களைப் பெற்றதும், திருமால் வாமனாவதாரத்தில் வழிபட்டதுமான வரலாறுகள் இத்தலப் பதிகம் 5, 7வது திருப்பாடல்களுள் குறிப்பிடப்பட்டுள்ளன. இவ்வரலாறுகள் காரணமாக முறையே குறுமாணக்குடி, திருக்

கண்ணார்கோயில் என்ற பெயர்களைப் பெற்றது. இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று மட்டுமே உள்ளது.

சீகாழியிலிருந்து மயிலாடுதுறை செல்லும் வழியில் சீகாழிக்குத் தெற்கே 9 கி.மீ. தொலைவில் உள்ளது குறுமாணக்குடி என்ற பெயர் பொறித்த கைகாட்டி. இங்கே இறங்கி கிழக்கே சுமார் 3 கி.மீ. தொலைவு நடந்து சென்று இத்தலத்தை அடையலாம். அல்லது வைத்தீசுவரன் கோயில் கீழவீதியிலிருந்து தெற்கே செல்லும் பாதையில் சுமார் 3 கி.மீ. நடந்து சென்றாலும் இத்தலத்தையடையலாம். இறைவர் பெயர்-கண்ணாயிரநாதர்; இறைவியார் - முருகுவளர்கோதை; தீர்த்தம் - மணிகர்ணிகை; தலவிருட்சம் - வில்வம்.

## உ. திருக்கடைமுடி

காவிரி வடகரை 18வதான இத்தலம் தற்பொழுது கீழையூர் என வழங்கப்படுகிறது. இத்தலத்தில் கன்மரிஷியென்பவர் வழிபட்டுப் பேறுபெற்றதாகத் தலவரலாறு கூறுகிறது. பிரமதேவன் வழிபட்டதாகவும் கூறப்படுகிறது. இத்தலத்துக்குத் தெற்கில் சுமார் ½கி.மீ. தொலைவில் காவிரியாறு ஓடுகிறது. சிறிது தூரம் பச்சிமவாஹினியாக (மேற்கு நோக்கி) ஓடுவது விசேடம் என்று கூறப்படுகிறது. திருஞானசம்பந்தர் மட்டும் ஒரு பதிகம் பாடியுள்ளார்.

மயிலாடுதுறை - பூம்புகார் காவிரி வடகரை வழியாகச் செல்லும் பேருந்து வழியில் மயிலாடுதுறைக்குக் கிழக்கே 11 கி.மீ. தொலைவில் கீழையூர் மேல முக்கூட்டும், 15 கி.மீ. தொலைவில் கீழையூர் கீழ முக்கூட்டும் உள்ளன. இவ்வழியில் பேருந்துகளும், 12, 21A, 28 எண் நகரப்பேருந்துகளும் (TOWN BUS) செல்கின்றன. கீழையூர் மேலமுக்கூட்டில் இறங்கி ஒரு கி.மீ. வடகிழக்கே நடந்து சென்றாலும், கீழமுக்கூட்டில் இறங்கி 2 கி.மீ. வடமேற்கே நடந்து சென்றாலும் கோயிலை அடையலாம். இறைவர் திருப்பெயர் கடைமுடிநாதர். இறைவியார் - அபிராமி அம்மை, தீர்த்தம் - கருணை தீர்த்தம், காவிரி பச்சிம வாஹினி. தலவிருட்சம்-கிளுவைமரம்.

## 3. திருப்புள்ளிருக்குவேளூர்

வைத்தீசுவரன்கோயில் என்று பிரசித்தியுடன் விளங்கு வதும், காவிரி வடகரை 16வது தலமுமான திருப்புள்ளிருக்கு வேளூர் என்னுமித்தலத்தில் ஸ்ரீராமன், லக்ஷ்மணன், சடாயு, சம்பாதி, பிரமதேவன், நான்கு வேதங்கள், ஆறுமுகப்பெரு மான், சூரியன், அங்காரகன் ஆகியோர் வழிபட்டுப் பேறு பெற்றனர் என்று தலபுராணம், மற்றும் தலப்பதிகங்கள், ஸ்ரீ வைத்தியநாதாஷ்டகம் முதலிய நூல்கள் கூறுகின்றன. சடாயு சம்பாதி என்ற இருவரும் கழுகு என்னும் (புள்) பறவை இனத்தைச் சேர்ந்தவர்கள். இருக்கு என்பது வேதம். ஊர் என்பது சூரியனைக் குறிக்கும். எனவே புள்ளிருக்குவேளூர் என வழங்குவதாயிற்று. பிறவிப்பிணிக்கு மருந்து ஆகவும், வைத்தியனாகவும் விளங்குதலால் இத்தலத்தில் இறைவர் வைத்தியநாதன் எனப்போற்றப்படுகிறார். எனவே வைத்திய நாதனின் கோயில் என்ற பொருளில் வைத்தீசுவரன் கோயில் என்றும் வழங்கப்படுகிறது. கோயில் மிகப்பெரியது. திருத் தருமையாதீனக் கோயில்களின் மரபுக்கேற்பத் தூய்மையாக வும், சிறப்பாக நடைபெறும் பூசனைகளுடனும் திகழ்கிறது.

பிறவி நோயை வைத்தியநாதப்பெருமானும். மன நோயை இறைவி தையல்நாயகியும், கலியினால் வரும் துன் பத்தைச் செல்வமுத்துக்குமாரசுவாமியும் தீர்த்து வைக்கும் பெருமையுடையதாய் இறைவர், இறைவி, முருகன் ஆகிய மூன்று சந்நிதிகளும் சிறப்புடன் விளங்குகிறது. பல்லாயிரக் கணக்கான குடும்பங்களுக்குக் குலதெய்வமாகும் இப்பெரு மானைத் தரிசித்து உடற்பிணி, பிறவிப்பிணி ஆகிய இரு பிணி களையும் தீர்த்துக்கொள்ளப் பக்தர்கள் திரண்டு வந்து கொண்டே இருக்கும் பெருமையுடையது இத்தலம்.

இத்தலத்துச் சித்தாமிருதத் தீர்த்தம் மிகவும் பிரசித்தி பெற்றது. தையல்நாயகி அம்மையின் திருக்கண் பார்வை படும்படியாக அம்மன் சந்நிதிக்கு நேர் எதிரில் இருக்கும் பெருமை பெற்றது. செல்வமுத்துக்குமாரசுவாமிக்குப் பிரதி



திருநின்றியூர் திருக்கோயில்



திருநின்றியூர் திருக்கோயில் உள்புறக்காட்சி

கிருத்திகை நாளிலும் நடைபெறும் அபிடேக ஆராதனைகளைக் காணக் கோடிக் கண்கள் போதா. "ஒருண்டை மண்ணை உண்டால் ஐயிரண்டு பிறப்புமவர்க்கு ஒழிக்கலாமே" என்று திருப்புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம் கூறுவது போல இத் தலத்துப் பிரசாதமாகத் திருச்சாந்துருண்டை எனப்படும் மண்ணுருண்டை பக்தர்களுக்கு வழங்கப்படுகிறது. இத்தலத் துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகங்கள் இரண்டு, ஆக மூன்று தேவாரப் பதிகங்கள் உள்ளன. மற்ற அருளாளர்கள் பாடிய கலம்பகம், பிள்ளைத் தமிழ், அந்தாதி, தலபுராணம் முதலியவையும் உள்ளன.

மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த் தருள வல்லானாகிய இப்பெருமான் எழுந்தருளியிருக்கும் இத் தலத்தை அடைவது மிக எளிது. சென்னை-மயிலாடுதுறை இருப்புப் பாதையில் சீகாழிக்குத் தெற்கே 6 கி. மீ தொலைவி லும் மயிலாடுதுறைக்கு வடக்கே 13 கி. மீ. தொலைவில்மாக அமைந்துள்ளது. சிதம்பரம், அணைக்கரை, கும்பகோணம், மயிலாடுதுறை, சீகாழி முதலிய ஊர்களிலிருந்து இவ்வூருக் குப் பேருந்துகள் வருகின்றன. இறைவர் திருப்பெயர்—வைத்தியநாதர்; இறைவி—தையல்நாயகி; தீர்த்தம்—சித்தா மிருத தீர்த்தம்; தலவிருட்சம்—வேப்பமரம்.

## 4. திருநின்றியூர்

காவிரி வடகரை 19வது தலமான திருநின்றியூர் இலக்குமி, இந்திரன், காமதேனு, அகத்தியர், ததீசி முதலி யோர் வழிபட்டுப் பேறு பெற்ற தலமென்றும், பரசுராமனுக்கு ஏற்பட்ட பிரமஹத்தி தோஷத்தைப் போக்கித் திருவடி தரி சனம் கொடுத்த தலமென்றும் கூறப்படுகிறது. அந்தப்பரசு ராமனால் 300 வேதியர்க்கு 300 வேலி நிலமும், இறைவருக்கு 60 வேலி நிலமும் தானம் கொடுக்கப்பெற்றதாகவும் கூறப்படு கிறது. பரசுராமனது தொடர்பு உள்ள தலம் என்பது காட்ட கோயிலினுள் பரசுராமனுக்குச் சிலை உள்ளது. இந்தச்செய் தினைச் சுந்தரமூர்த்தி நாயனார் "மொய்த்த சீர்மூந்நூற்று

அறுபது வேலி மூன்று நூறு வேதியரொடு நுனக்கு, ஒத்த பொன்மணிக் கலசங்களேந்தி ஓங்கு நின்றியூரென்றுனக் களிப்பப், பத்திசெய்தவப்பரசுராமற்குப் பாதங்காட்டிய நீதி கண்டடைந்தேன், சித்தர் வானவர் தானவர் வணங்குஞ் செல்வத் தென்திரு நின்றியூரானே'' என்று இத்தலத்துத் தாம் பாடிய தக்கேசிப்பண்ணிலமைந்த திருப்பதிகத்தில் குறிப் பிட்டுள்ளார். (7ம் திருமுறை 65ம் பதிகம் 3ம் திருப்பாடல்) இதனுல் திருநின்றியூர் என்பது பரசுராமன் இட்ட பெயர் என்று கருத இடமிருக்கிறது. மற்றும் மஹாலட்சுமி வழிபட்டு நிலைபேறு பெற்ற தலமாகையால் இப்பெயர் பெற்றது என்றும் கூறப்படுகிறது. இவ்வாறின்றி நியமமாகத் தரிசித்து வந்த ஒரு சோழ அரசன் கொண்டுவந்த திரி (தீவர்த்தி) நின்றுவிட்ட போது, அவனது வழிபாட்டுக்கு இடையூறில் லாது இறைவரது இலிங்கத்திருமேனியினின்றும் ஒரு சோதி தோன்றியதால் திரிநின்றவூர் என வழங்கிப் பின் திருநின்றி யூர் ஆக மருவியது எனவுங்கூறுவர். திருநின்றியூர் என்பதும் மருவித் தற்காலம் திருநன்றியூர் என்றே வழங்கப்படுகிறது.

இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திரு நாவுக்கரசர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் இரண்டு ஆக நான்கு திருப்பதிகங்கள் உள்ளன. சிதம்பரம்-மயிலாடுதுறை இருப்புப்பாதையில், ஆனந்ததாண்டவபுரம் நிலையத்தி னின்றும் வடகிழக்கே சுமார் 3 கி மீ. தொலைவில் உள்ளது. பேருந்து மூலம் சென்ருல் சிதம்பரம்-மயிலாடுதுறை மார்க்கத் தில் சீகாழிக்குத் தெற்கே சுமார் 10 கி.மீ. தொலைவிலும் மயி லாடுதுறைக்கு வடக்கே சுமார் 8 கி மீ. தொலைவிலும் உள்ளது. இறைவர்-மஹாலட்சுமிநாதர், லக்ஷ்மிபுரீச்வரர். இறைவி-உலக நாயகி. தீர்த்தம்-எமதீர்த்தம். தலவிருட்சம்-கருவை மரம்.

## 6. திருப்புன்கூர்

காவிரி வடகரைத் தலங்களுள் 20வது தலமான திருப்புன் கூர் நந்தனர் சரித்திரத்தோடு தொடர்பு கொண்ட தலமாகும்.

திருக்கோயிலுள் செல்லாது புறத்தே கோபுரவாயிலினின்றும் வழிபடும்போது, இறைவரது இலிங்கத் திருமேனி தெரியா வண்ணம் நந்தி மறைத்தது என்றும், உடனே இறைவர் நந்தியைச் சற்று விலகியிருக்குமாறு கட்டளையிட்டார் என்றும் பெரியபுராணம் கூறுகிறது. நந்தி விலகியிருப்பதை இன்றுங் காணலாம். இறைவரை நேர்கண்டு கும்பிட்டுத் திருக் கோயிலை வலம்வரும்போது மேற்குப் புறத்தே ஒரு பள்ளம் இருக்கக் கண்டு அதனைக் குளமாகத் தோண்டினார் என்றும் பெரியபுராணம் கூறுகிறது. அங்ஙனம் குளமாகத் தோண்ட நந்தனாருக்குக் கணபதி உதவி செய்தார் என்று தலபுராணம் கூறுகிறது. பிராகாரத்தின் தென்கிழக்கு மூலையில் நந்தனா ருக்குத் தனிக்கோயில் இருக்கிறது. கோயிலினுள் இவருக்குச் செப்புப் படிமமும் உள்ளது. மூலஸ்தானத்து இலிங்கம் புற்று மண்ணால் அமைந்தது. பிரதி திங்கட்கிழமையும் அர்த்த சாமத்தில் புனுகுச் சட்டம் சாத்தப்படுகிறது.

ஒரு சமயம் வையகம் முற்றும் மழையின்றி வருந்திய போது அறுபத்து மூவரில் ஒருவரான ஏயர்கோன் கலிக்காம நாயனார் பன்னிருவேலி நிலம் தருவதாகப் பிரார்த்தனை செய்து கொண்ட போது மழை பெய்து பெருவெள்ளமாக, அதை நிறுத்த வேண்டி மேலும் பன்னிருவேலி நிலத்தை ஏயர்கோன் அளித்தார் என்ற செய்தியை சுந்தரமூர்த்தி நாயனார் இத்தலத்துப் பதிகத்தில் குறிப்பிட்டுள்ளார். (7ம் திருமுறை, 55ம் திருப்பதிகம், 2ம் பாடல்). திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக மூவர் பதிகமும் பெற்ற சிறப்புடைய தலங்களில் இதுவும் ஒன்றாகும். வைத்தீசுவரன் கோயிலிலிருந்து மணல் மேடு வழியாக அணைக்கரை செல்லும் பேருந்து வழியில் வைத் தீசுவரன் கோயிலுக்கு மேற்கே சுமார் 3 கி.மீ. தொலைவில் உள்ளது. மற்றும் கும்பகோணம்-சீகாழி (மணல்மேடு வழி) மணல்மேடு-சீகாழி பேருந்துகளும், மயிலாடுதுறையிலிருந்து 16 எண் நகரப்பேருந்தும் (TOWN BUS) இவ்வூர் வழியாகச் செல்கின்றன. இறைவர் திருப்பெயர் – சிவலோகநாதர்;

இறைவியார்-சொக்கநாயகி; தீர்த்தம் - கணபதி தீர்த்தம்; தலவிருட்சம் - புன்கமரம்.



## 6. திருஅன்னியூர்

பொன்னூர் என இப்பொழுது வழங்கப்படும் திரு அன்னியூர் காவிரி வடகரைத் தலங்களுள் 22வது ஆகும். இத்தலத்தில் அக்கினிதேவன், அரிச்சந்திரன், பாண்டவர், வருணன், இரதிதேவி முதலானோர் வழிபட்டுப் பேறுபெற்றதாகத் தல வரலாறு கூறுகிறது. கார்த்திகை மாதம் ஞாயிறு தீர்த்த மாடுதல் விசேடம். பங்குனி மாதம் 26ம் தேதி முதல் 30ம் தேதி வரையில் ஐந்து நாட்கள் காலையில் சூரியன் தன் கதிர்களால் சிவலிங்கத் திருமேனியைத் தொட்டு வழிபடுவது சூரியபூஜை எனப்படும். இத்தலத்துக்குத் திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று, ஆக இரண்டு பதிகங்கள் உள்ளன.

சிதம்பரம்-மயிலாடுதுறை இருப்புப்பாதையில் நீடூர் நிலையத்துக்குச் சுமார் 5 கி.மீ. தொலைவில் உள்ளது. மயிலாடு

துறையிலிருந்து மணல்மேடு செல்லும் 17 எண் நகரப்பேருந் தும் இவ்வூர் வழியாகச் செல்கிறது. இறைவர்-ஆபத்ஸஹா யர்; இறைவி-பெரியநாயகி; தீர்த்தம்-வருண தீர்த்தம்; தல விருட்சம் - எலுமிச்சை.



## 7. திருமணஞ்சேரி

காவிரி வடகரைத் தலங்களுள் 25வது தலமான திரு மணஞ்சேரி இப்போது கீழைத்திருமணஞ்சேரி என்று வழங்கப் படுகிறது. இதற்கு மேற்கே சுமார் 1 கி.மீ. தொலேவில் உள்ளது திருஎதிர்கொள்பாடி என்ற மேலேத்திருமணஞ்சேரி யாகும்.

திருஞானசம்பந்தர் பாடிய இந்த கீழைத்திருமணஞ்சேரி என்னும் திருமணஞ்சேரியில் மன்மதன் வழிபட்டு அருள் பெற்றான் என்று கூறப்படுகிறது. ஒரு வைசியப்பெண்ணுக்கு பிறந்த ஆமை வடிவு மகன் இத்தலத்து இறைவரை வழிபட்டு மனிதஉருப் பெற்று தனக்குரிய முறை மணப்பெண்ணை மணந்து கொண்டான் என்றும் தலவரலாறு கூறுகிறது. இராகு கேது தோஷ நிவர்த்திக்கும் பிரசித்தமான தலமாக இது விளங்குகிறது. கலியாணசுந்தரர் சந்நிதி மிக விசேடம். திருமணம் ஆகாது தாமதப்படும் கன்னிப்பெண்கள் இத்தலத்துக்கு வந்து வழிபட்டு, கல்யாணசுந்தரருக்கு மாலை அணிவித்து அருச்சனை செய்து விரைவில் திருமணம் அடைந்துவருவது இன்றும் கண்கூடாகக் காணும் விசேடமாகும். இத்தலத்தில் இறைவியார் வீற்றிருந்த கோலத்தில் காட்சி தருவது மிகவும் குறிப்பிடத்தக்கது. திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் ஒன்று, ஆக இரண்டு உள்ளன.

மயிலாடுதுறையிலிருந்து 5 நெம்பர் நகரப்பேருந்து (TOWN BUS) இத்தலத்துக் கோயில் வாயிலின் வரை வருவதால் அனைவரும் இத்தலத்தை எளிதாக அடைந்து வழிபடலாம். இறைவர் திருப்பெயர் - அருள்வள்ளல்நாதர்; இறைவியார் திருப்பெயர்–யாழினும்மென்மொழி அம்மை; தீர்த்தம்- ஸர்வபூத தீர்த்தம் (கோயிலைச்சுற்றி அகழியாக விளங்குகிறது); தலவிருட்சம் - வன்னி.

## 8. திருவேள்விக்குடி

காவிரி வடகரை 23வது தலமான திருவேள்விக்குடியையும் தென்கரை 37வது தலமான திருத்துருத்தியையும் சேர்த்து ஒரே தலமாகத் திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகமே இப்பதிப்பில் கொடுக்கப்பட்டுள்ளது. எனவே இருதலங்களைப் பற்றிய குறிப்புக்களை இங்குத் தருதல் பொருத்தமாயினும் திருத்துருத்தி தனியாகப் போற்றப்பட்டுத் திருஞானசம்பந்தரது பதிகம் பெற்றுள்ளதால் அப்பதிகம் பிரசுரமாகும் போது அத்தலவரலாறும் பிரசுரிக்கப்படும். ஈண்டு, திருவேள்விக்குடி

பற்றிய குறிப்புகளை மட்டுமே தருகின்ரேம். இத்தலத்தில் சிவபெருமானுக்கும் பார்வதிதேவியாருக்கும் திருமணத்தின் பொருட்டு வேள்வி நடந்ததென்றும் அதனுல் இத்தலம் வேள்விக்குடி எனப் பெயர் பெற்றதென்றும், அதன்பின் திரு மணஞ்சேரியில் திருமணம் நடைபெற்றது என்றும் தல வரலாறு கூறுகிறது. திருமணஞ்சேரியின் பெயர்க்காரணமும் இதனுல் புலப்படுகிறது. இறைவர் பகற்காலத்தல் திருத் துருத்தியிலும், இரவில் இததலத்திலும் எழுந்தருளியிருப்ப தாகப் பதிகத்தால அறியக்கிடக்கின்றது. இத்தலத்திலுள்ள கலியாணசுந்தரர் செப்பு விக்கிரஹம் பேரழகு வாய்ந்தது.

திருஞானசம்பந்தர் பதிகம் ஒன்று, சுந்தரர் பதிகம் ஒன்று ஆக இரணடு பதிகங்கள் இத்தலத்துக்கு உள்ளன. மாயூரம்-கும்பகோணம் இருப்புப்பாதை மார்க்கத்தில் குற்ருலம் நிலையத்திலிருந்து வடகிழக்கே சுமார் 4 கிலோ மீட்டர் தொலைவில் உள்ளது. கும்பகோணம்—மயிலாடுதுறை காவிரி வடகரை மார்க்கமாகச் செல்லும் பேருந்துகள் மூலமும் இத்தலத்தை யடையலாம். குற்ருலம் (குத்தாலம்) பந்தநல்லூர் பேருந்து வழியில் உள்ள அஞ்சலாத்தங்கரை என்னுமிடத்தில் இறங்கி கிழக்கே சுமார் 1 கி. மீ. நடந்து சென்றும் இத்தலத்தையடை லாம். மயிலாடுதுறை—பந்தநல்லூர் செல்லும் 14, 22, 24 என் நகரப் பேருந்துகளும் அஞ்சலாத்தங்கரை வழியாக செல் கின்றன. இத்தலத்து இறைவர்-கலியாணசுந்தரர்; இறைவி-பரிமளசுகந்த நாயகி (இத்திருப்பெயரைத் திருஞானசம்பந்தர் தம் பதிகம் 2-வது பாடலில் "நாறு சாந்து இளமுலை அரிவை" எனப் போற்றியுள்ளார்); தீர்த்தம்—மங்கள தீர்த்தம்; தல விருட்சம்—வில்வம்.

## 9. திருக்கோடிகா

காவிரி வடகரை 37வது தலமான திருக்கோடிகா இப்பொழுது திருக்கோடிகாவல் என வழங்குகிறது. மூன்று கோடி முனிவர்கள் இத்தலத்தில் இறைவரை வழிபட்டதால் திருக்கோடிகா எனப்பெயர் பெற்றது எனத்தலவரலாறு கூறு-

கிறது. கும்பகோணம்—மயிலாடுதுறை காவிரி வடகரை வழியாகச் செல்லும் பேருந்து வழியில் கும்பகோணத்துக்குக் கிழக்கே 19 கி. மீ. தொலைவிலும், மயிலாடுதுறைக்கு மேற்கே 17 கி. மீ. தொலைவிலுமாக இத்தலம் உள்ளது. கும்பகோணத்திலிருந்து 2 எண் நகரப் பேருந்தும் இவ்வழியே செல்கிறது. இரயில் மூலம் செல்வதானால் மயிலாடுதுறை—கும்பகோணம் மார்க்கத்தில் நரசிங்கன்பேட்டை இரயில் நிலையத்தினின்றும் வடக்கே சுமார் 2 கி. மீ. தொலைவில் உள்ளது. திருஞான சம்பந்தர் பதிகம் ஒன்று, திருநாவுக்கரசர் பதிகம் மூன்று ஆக நான்கு பதிகங்கள் இத்தலத்துக்கு உள்ளன.

இறைவர் திருப்பெயர்—கோடிகா ஈசுவரர்; இறைவியார் திருப்பெயர்— வடிவம்மை; தீர்த்தம்—சிருங்க தீர்த்தம்; தல விருட்சம்—வில்வம்.

## 10. திருமங்கலக்குடி

காவிரி வடகரை 38வது தலமான திருமங்கலக்குடி ஈசனை மாகாளி, வெங்கதிர்ச் செல்வன் (சூரியன்), திருமால், நான்முகன், அகத்தியர், ஜலமஹரிஷி முதலானோர் வழிபட்டுத் திருவருள் பெற்றனர் என்று தலபுராணத்தால் அறியப்படுகிறது. இத்தலத்திலும் தொடர்ந்து சில வெள்ளிக்கிழமைகள் காவிரியில் நீராடி (காவிரியில் தண்ணீர் இருந்தால்) இறைவரையும் இறைவியையும் வழிபட்டால் திருமணம் தடைப்படும் அல்லது தாமதப்படும் பெண்களுக்குத் திருமணம் விரைவில் நடைபெறும் என்று கூறப்படுகிறது. இது பற்றிய அறிவிப்பும் கோயில் சுவரில் எழுதப்பட்டுள்ளது. இறைவர் இங்குப் பிராணவரதேசுவரர் (பிராணன் தந்த பிராணேச்வரர்) என்றும் இறைவியார் மாங்கல்யம் தந்த மங்களநாயகி என்றும் வழங்கப்பெறுகிற ஐதிகத்துக்கு ஏற்ப ஒரு வரலாறும் சுவரில் பொறிக்கப்பட்டுள்ளது. திருஞானசம்பந்தர் ஒரு பதிகமும் திருநாவுக்கரசர் ஒரு பதிகமும் பாடியுள்ளனர்.

இத்தலம் கும்பகோணம்—மயிலாடுதுறை காவிரி வடகரைப் பேருந்து வழியில் கும்பகோணத்துக்குக் கிழக்கே 14

கி. மீ. தொலைவிலும், மயிலாடுதுறைக்கு மேற்கே 22 கி. மீ. தொலைவிலும் உள்ளது. இவ்வழியில் பேருந்துகளும், நகரப் பேருந்துகள் 2, 26, 38 எண்கள் உள்ளவைகளும் செல்கின்றன. மேலும் ஆடுதுறையிலிருந்து திருப்பனந்தாள் வழியாக அணைக்கரை செல்லும் பேருந்து வழியில் ஆடுதுறைக்கு வடக்கே சுமார் 2 கி. மீ. தொலைவில் உள்ளது. இவ்வழியில் 27 எண் நகரப் பேருந்து செல்கிறது. மயிலாடுதுறை—கும்பகோணம் இரயில் மார்க்கத்தில் ஆடுதுறை இரயில் நிலையத்திலிருந்து சுமார் 3 கி. மீ. தொலைவிலும் இத்தலத்தையடையலாம். இத்தலத்துக்கு வடகிழக்கே சுமார் ½ கி.மீ. தொலைவில் பிரசித்தி பெற்ற நவக்கிரஹத் தலமான சூரியனார்கோவில் உள்ளது. இறைவர் திருப்பெயர்—புராணேசுவரர், பிராணவரதேசுவரர்; இறைவியார்—மங்களநாயகி; தீர்த்தம்-மங்கள தீர்த்தம்; தலவிருட்சம்—வில்வம்.

ஆசிரியர் குறிப்பு—இப்பதிப்பில் உள்ள இத்தல விசேடப் பகுதியினைத் தொகுத்து எழுதுவதற்குத் துணை செய்த நூல்கள்: 1. சிவக்கவிமணி திரு சி. கே. சுப்பிரமணிய முதலியார் அவர்களது பெரியபுராணப் பேருரை—திருஞானசம்பந்தர் புராணப்பகுதி. 2. தலத்துக்கு ஒரு தேவாரம் என்ற திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடம் வெளியீடு. 3. சிவமணி தமிழ்க்கடல், திரு ராய. சொ. அவர்களது திருத்தலப் பயணம் எனற நூல். 4. திருத்தருமை ஆதீனத் திருமுறை வெளியீடுகள் (குறிப்புரையுடன் கூடியவை) ஆகியவையாம். இந்த நூல்களின் ஆசிரியர்கள், பதிப்பாளர்கள் ஆகியோருக்கு எமது நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

சிவம்

சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்



மொழிக்கு மொழி தித்திக்கும்

# மூவர் தமிழ் மாலை-20

திருஞானசம்பந்தர் அருளியவை

(தொடர்ச்சி)

## திருக்கண்ணார்கோயில்

பதிக வரலாறு :—ஞாலத்துயர் சீகாழிப் பெருமானைப் பல விகற்பச் செய்யுட்களாகிய செந்தமிழ் மாலைகளால் மூல இலக்கியமாக எல்லாப் பொருள்கோளும் முற்றக் காணும் படியாகப் பாடித்துதித்து மகிழ்ந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார், அருந்தமிழ் நாடெங்கிலும் உள்ள சிவபிரானார் எழுந்தருளியுள்ள திருப்பதிகள் அனைத்தையுங் கும்பிட்டு, எங்குந் தமிழ் மாலை பாடித்துதித்து இங்கு திரும்பி வருவேன் என்று தம் தந்தையாராகிய சிவபாதவிருதயரிடமும் மற்றும் உள்ள தவமுனிவர்களுக்கும் அருள் செய்தார். இதைக் கேட்ட சிவபாதவிருதயர் அருமையாகப்பெற்ற பிள்ளையாரைப் பிரிந்து உறைய ஆற்ருமையாலும், இருமைக்கும் இன்பம்

அளிக்கும் சிவயாகம் செய்ய வேண்டியிருத்தலாலும் இன்னும் சில காலம் தாமும் பிள்ளையாருடன் இருக்கும் உறுதியை விண்ணப்பிக்க, திருஞானசம்பந்தப் பெருமானும் அதற்கு இசைந்தருளி, தோணியப்பர் திருவருள் விடைபெற்றுச் சீகாழி யினின்றும் நீங்கித் தம் ஐந்தாவது தலயாத்திரையினை மேற் கொண்டு தொண்டர்கள் புடைசூழச் சின்னங்கள் ஆரவாரிக்க, முத்துச்சிவிகையில் பிள்ளையார் எழுந்தருளிச் சென்றனர். இந்தத் தலயாத்திரையில் பிள்ளையார் தரிசித்த முதலாவது தலம் திருக்கண்ணார்கோயிலாகும். பெருவிருப்புடன் கோயில் புக்கு அங்கு எழுந்தருளியுள்ள பிஞ்ஞகனைத் துதித்துப்பாடி யதே "தண்ணார்திங்கள்" எனத்தொடங்கும் இப்பதிகமாகும்.

பண்-குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

தண்ணார்திங்கட் பொங்கரவந்தாழ் புனல்சூடிப்
பெண்ணாணாய பேரருளாளன் பிரியாத
கண்ணார்கோயில் கைதொழுவோர்கட் கிடர்பாவம்
நண்ணாவாகும் நல்வினையாய நணுகும்மே. 1

பதிகப்பொழிப்புரை:—1. குளிர்ச்சி பொருந்திய சந்திரனை யும், பொங்குதலையுடைய பாம்பையும், கங்கையாற்றினையும் தலையிலணிந்து, பெண்ணும் ஆணுமாய் (சத்தியும் சிவமு மாய்) இருக்கின்ற பேரருளாளனாகிய சிவபிரான் என்றும் பிரி யாது எழுந்தருளியுள்ள திருக்கண்ணார்கோயில் என்ற திருத் தலத்தினை வழிபடுவோர்களுக்கு துன்பமும் அதற்குக் காரண மாகிய பாவமும் வந்து அடையா. நற்செயல்களின் பயனாகிய புண்ணியம் வந்து சேரும். (அதனால் இன்பமாய் வாழ்வர் என்பது கருத்து.)

பொங்கரவம்— பொங்கு அரவம்—சீறிப் படமெடுக்கும் இயல்பினையுடைய பாம்பு. சீறுதல் சினமிகுதியால் என்று கொள்க.

தாழ்புனல்-தாழும் புனல், அதாவது பள்ளத்தை நோக்கிப் பாயும் தன்மையுடைய புனல். இங்கு கங்கா நதியினைக் குறித்தது.

நல்வினை—இங்குப் புண்ணியத்தின் மேல் நின்றது. பாவங்கள் ஒழிதலால் புண்ணியம் வந்து சேரும். புண்ணியத்தின் பயன் இன்பம் என்பது அனைவரும் அறிந்ததே. இத்தகைய சிறந்த பயனை அளித்தலால் சிவத்தல தரிசனம் இன்றியமையாதது எனக் கொள்க.

கந்தமர்சந்துங் காரகிலுந்தண் கதிர்முத்தும்
வந்தமர்தெண்ணீர் மண்ணிவளஞ்சேர் வயன்மண்டிக்
கொந்தலர்சோலைக் கோகிலமாடக் குளிர்வண்டு
செந்திசைபாடுஞ் சீர்திகழ்கண்ணார் கோயிலே. 2

2. மணம் பொருந்திய சந்தனக் கட்டைகளும், கரிய அகிற்கட்டைகளும், ஒளிவிடும் குளிர்ச்சி பொருந்திய முத்துக்களும் வந்து சேருகின்ற தெளிந்த நீரையுடைய மண்ணியாறு வளஞ்செய்கின்ற வயல்கள் நிறைந்ததும், பூக்கள் கொத்துக்களாக மலர்தலையுடைய சோலைகளில் குயில்கள் ஆட வண்டுகள் செவ்வழிப்பண்ணைப் பாடுதலையுடைய பெருமை திகழ்கின்றதுமான திருக்கண்ணார்கோயில். (இதுவே இறைவர் விரும்பி உறையுமிடம், இதனை வழிபடுங்கள் என அறிவுறுத்தியதாகக் கொள்க).

கந்து – கந்தம், அதாவது நறுமணம்.

கார் அகில் — கருமை நிறமுடைய அகில் என்னும் மரக் கட்டைகள். கோகிலம் - குயில். செந்திசை - செவ்வழியென்னும் பண்.

பாடும் இயல்பினவாய குயில்கள் ஆடுவது இத்தலத்துச் சிறப்புப் போலும்.

வண்டு பாடும் என்பதற்கு ''வண்டும் பாடும்'' என "உம்" மை விரித்து அடியார்களே அன்றி வண்டுகளும் பாடும் திருக் கண்ணார்கோயில் என்றும் கொள்ளலாம். (இது சிவக்கவி மணி சி.கே. சுப்பிரமணிய முதலியாரவர்கள் குறிப்புரையைத் தழுவியது.)

பல்லியல்பாணிப் பாரிடமேத்தப் படுகானில்
எல்லிநடஞ்செய் யீசனெம்மான்றன் இடமென்பர்
கொல்லையின்முல்லை மல்லிகைமௌவற் கொடிபின்னிக்
கல்லியலிஞ்சி மஞ்சமர்கண்ணார் கோயிலே. 3

3. பலவாகிய இயல்பினையுடைய பாடல்களைக் கொண்டு பூதகணங்கள் துதிக்கச் சுடுகாட்டில் இரவில் நடஞ்செய்யும் ஈசனாகிய எம்பெருமானது இடம் காட்டு நிலத்தில் முல்லை, மல்லிகை, காட்டுமல்லிகை ஆகியவற்றின் கொடிகள் பின்னிக் கிடப்பதும் கற்களால் இயன்ற மதிற்சுவர்கள் மேகத்தைத் தொடுதலையுடையதுமான திருக்கண்ணார்கோயில் என்று (பெரியோர்கள்) கூறுவர்.

பாணி - பாட்டு; பாரிடம் - பூதகணங்கள்; படுகான் - சுடு காடு; எல்லி - இரவு; கொல்லை - முல்லை நிலம், இது காடும் காடு சார்ந்த இடமுமாகும். மௌவல் - காட்டுமல்லிகை; இஞ்சி - மதில்; மஞ்சு - மேகம்.

தருவளர்கானந் தங்கியதுங்கப் பெருவேழம்
மருவளர்கோதை அஞ்சவுரித்து மறைநால்வர்க்கு
உருவளர்ஆல நீழலமர்ந்திங் குரைசெய்தார்
கருவளர்கண்ணார் கோயிலடைந்தோர் கற்றோரே. 4

4. மரங்கள் வளர்தலையுடைய காட்டில் வசிக்கும் உயர்ந்த யானையை உமாதேவியாரும் அஞ்சும்படி உரித்துத் தோலைப்போர்த்திக் கொண்டும், வேதமறிந்த இருடியர் நால் வர்க்கு வடிவம் உயர்ந்து வளர்தலையுடைய கல்லால மரத்தின் கீழ் அமர்ந்து அறமுரைத்தலும் செய்தவராகிய சிவபிரானது

புகழ் வளர்தலையுடைய திருக்கண்ணார்கோயிலைச் சென்று அடைபவர்களே கற்றவர்கள் ஆவர். (எவ்வளவு கற்றாலும் பிறர் கற்றவர் என மதிக்கப்படமாட்டார் என்பதாம்).

பெருவேழம்—இறைவர் உரித்துப் போர்த்தியது கயாசுரன் என்ற யானை வடிவுடைய அசுரனேயாயினும், யானை என்ற பொதுமை நோக்கி, 'கானந்தங்கிய துங்கப்பெருவேழம்' என்றருளிச் செய்தனர் பிள்ளையார்.

மருவளர் கோதை—மரு என்பது மணத்தினை குறிக்கும். எனவே இயற்கை மணம் வளர்தலையுடைய கேசத்தையுடைய உமாதேவியார்.

மறை நால்வர்—சனகர், சனந்தனர், சனத்குமாரர், சனாதர் என்று பிரசித்தியடைந்த பிரம புத்திரர்கள்.

உருவளர் ஆல நீழல்—'உரு' என்பது மரத்தின் உருவத்தைக் குறித்தது. எனவே வளர்தலையுடைய ஆலமர நீழல் என்பதாம். இவ்வாறின்றி குருவளர் ஆலம் எனப்பிரித்து "தெய்வத் தன்மையாகிய அச்சம் வளர்கின்ற ஆலமரம்" என உரைத்தார் தருமையாதீனக் குறிப்புரையாசிரியர். "நால்வர்க் குருவளர்" என்பதை "நால்வர்க்கு உருவளர்" என்று பிரித்தலே சரியானதாகும்.

"உரு உட்காகும்" என்பது தொல்காப்பியம், சொல்லதிகாரம், 300 வது சூத்திரம். உட்கு—பயம் என்ற பொருள் இருப்பதால் 'உருவளர்' என்பதற்கே இங்கு தெய்வத் தன்மையுடைய அச்சம் வளர்கின்ற என்று பொருள் உரைப்பினும் இழுக்காகாது.

கருவளர்—'கரு' என்பதற்குப் பெருமை, மேன்மை என்ற பொருள்கள் உளவாகையால் "பெருமை வளர்தல் உடைய" என்ற பொருள் கொள்ளப்பட்டது.

மறுமாணுருவாய் மற்றிணையின்றி வானோரைச்
செறுமாவலிபாற் சென்றுலகெல்லாம் அளவிட்ட
குறுமாணுருவன் தற்குறியாகக் கொண்டாடும்
கறுமாகண்டன் மேயதுகண்ணார் கோயிலே. 5

5. தன்க்கு இணையாக ஒருவருமின்றி வானோரை வருத்திய மஹாபலிச் சக்கரவர்த்தியிடம் தானம் பெறச் சென்று (தானம் பெற்றபின்) வஞ்சனையாகத் தன் உருவத்தைப் பெரியதாக்கி அதனால் எல்லா உலகங்களையும் அளவிட்டு, (பின் மூன்ருவது அடியால் பலிச் சக்கரவர்த்தியைப் பாதலத்தில் ஆழ்த்திய) குறுகிய உருவுடன் பிரமசாரியாக வாமனனாய் வந்த திருமால் தன் பழிதீரத் தன்னுடைய பூசைக்கு உரிய குறியாகக் (சிவலிங்கப் பிரதிஷ்டை செய்து வழிபட்ட) கொண்டாடிய கருத்த பெருமையுடைய நீல கண்டப் பெருமான் மேவியிருப்பது திருக்கண்ணார்கோயிலாகும்.

வாமனனாய்ச் சென்று மூன்று அடிமண் கேட்டுப் பெற்றுப் பின் தன் உருவைப் பெரிதாக்கி ஈரடியாலே மூவுலகினையும் அளந்து, மூன்ருவது அடியை மஹாபலியின் தலைமீது வைத்து அவனைப் பாதலத்தில் அழுத்திய திருமால் அங்ஙனம் தான் செய்த வஞ்சனையினால் ஏற்பட்ட பாவமும் பழியும் தீர இங்கு சிவலிங்கம் ஸ்தாபித்து வழிபட்ட செய்தி இப்பாடலில் கூறப் படுகிறது. இவ்வரலாற்றுக்கேற்ப, கோயிலுக்குத் திருக் கண்ணார்கோயில் என்று பெயர் இருந்தாலும், இதனையடுத்த ஊர் குறுமாணக்குடி என்று இன்றும் அழைக்கப்படுவது சிவ நேயர்கள் அறிந்து இன்புறுதற்குரியதாம்.

மறுமாண் உரு—குற்றம் பொருந்திய பெரிய வடிவம். குறுமாண் உருவன்— குறுகிய வாமன பிரமசாரி உருவம் எடுத்த திருமால். மாணி என்பது மாண் என்று வந்தது.

தற்குறியாக—தனது வழிபடும் சின்னமாக. (இங்கு வாமனமூர்த்தி பிரதிட்டை செய்து பூசித்த சிவலிங்கம்.)

வாமனனாய் மண்ணிரந்து பின் பலிச் சக்கரவர்த்தியைச் செற்ற பழி தீர, திருமாணிகுழி என்ற நடுநாட்டுப் பதினேழாவது தலத்திலும் திருமால் சிவலிங்க பூசை செய்த வரலாறு சேக்கிழார் பெருமான் தடுத்தாட் கொண்ட புராணம் 236வது திருப்பாடலில் கூறுகின்றார்.

''அங்கணரை யடிபோற்றி யங்ககன்று மற்றந்தப்
பொங்குநதித் தென்கரைபோய்ப் போர்வலித்தோள் மாவலிதன்
மங்கலவேள் வியில்பண்டு வாமனனாய் மண்இரந்த
செங்கணவன் வழிபட்ட திருமாணிக் குழியணைந்தார்.''

(செங்கணவன்—திருமால்; மாணி—பிரமசாரி, பிரமசாரி உருவில் திருமால் பூசித்தமையால் இத்தலம் திருமாணிகுழி என்ற பெயர் பெற்றது.)

திருமாணிகுழி என்ற இத்தலத்தில் திருஞானசம்பந்தர் பாடியருளிய பதிகத்திலும் வாமன உருவில் திருமால் பூசித்த செய்தியைக் குறிப்பிட்டுள்ளார். பின்னர் உரிய காலத்தில் இத்தலப்பதிகம் வெளியிடப்படும்.

விண்ணவருக்காய் வேலையுள்நஞ்சம் விருப்பாக
உண்ணவனைத்தே வர்க்கமுதீந்தெவ் வுலகிற்கும்
கண்ணவனைக்கண் ணார்திகழ்கோயிற் கனிதன்னை
நண்ணவல்லோர்கட் கில்லைநமன்பால் நடலையே. 6

6. தேவர்களது துயரைத் தீர்த்தற்பொருட்டுப் பாற்கடலினின்றும் எழுந்த விஷத்தினை விருப்பமுடன் உண்டவனை, அந்த தேவர்களுக்கு அமிர்தம் அளித்தவனை, அனைத்துலகுக்கும் கண்ணாயிருப்பவனை, திருக்கண்ணார்கோயில் என்ற இத்தலத்தில் திகழ்கின்ற கனியான சிவபிரானை அடைய வல்லவர்களுக்கு எமதருமனால் வரக்கடவதான துன்பம் ஏதும் இல்லை.

வேலை—கடல், இங்குப் பாற்கடலைக் குறித்தது.
உண்ணவன்—உண்டவன். நடலை—துன்பம்.

கண்—"முகத்திற் கண்ணிழந்து எங்ஙனம் வாழ்கேன்" என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் அருளியபடி ஒரு மனிதன் கண்ணின்றி வாழ்தல் இயலாதது போல, இறைவனின்றி உலகம் வாழ இயலாது என்பது குறிக்க "எவ்வுலகிற்கும் கண்ணவனே" என்றருளிச் செய்தனர்.

கனி—பழம். இது நாவுக்குச் சுவை தந்து, உடலுக்கு உணவுமாவது போல சிவபெருமானாகிய கனி இம்மை இன்பம், மறுமைப் பயன் ஆகிய இரண்டையும் அருள்கின்றார் என்பது குறிப்பு.

திருநாவுக்கரசு சுவாமிகளும் இறைவனைக் கனி என்று பாடியுள்ளார்.

"மனிதர் காளிங்கே வம்மொன்று சொல்லுகேன்
கனிதந் தாற்கனி உண்ணவும் வல்லிரே
புனிதன் பொற்கழல் ஈசனெ னுங்கனி
இனிது சாலவும் ஏசற்ற வர்கட்கே."

—5ம் திருமுறை, 91-7

திருமுறைகளில் ஈசனைக்கனி என்று பாடியுள்ள இடங்கள் இன்னும் உளவேனும் விரிவஞ்சி இங்குக் குறிப்பிடவில்லை.

முன்னொருகாலத் திந்திரனுற்ற முனிசாபம்
பின்னொருநாளவ் விண்ணவரேத்தப் பெயர்வெய்தித்
தன்னருளாற்கண் ணாயிரமீந்தோன் சார்பென்பர்
கன்னியர்நாளுந் துன்னமர்கண்ணார் கோயிலே. 7

7. முன்னொரு காலத்தில் (அகலிகை என்ற இருடி பத்தினியை வஞ்சகமாக அடைய முயன்றதால்) இந்திரன் அடைந்த கௌதம முனிவரின் சாபத்தைப் பின்னொரு நாள் (இந்திரன் பொருட்டு) தேவர்கள் வழிபட்டதால் தீர்வு செய்து தனது திருவருளால் (கௌதமர் இட்டசாபப்படி உண்டான ஆயிரம் குறிகளை மாற்றி) ஆயிரம் கண்களை வழங்கியருளிய

சிவபிரானது உறைவிடம், கன்னிப் பெண்கள் நெருங்கி வந்து நாள்தோறும் வழிபடும் திருக்கண்ணார்கோயில் என்று (பெரியோர்) கூறுவர்.

அகலிகையை அடைய வஞ்சனையாக முயற்சித்த இந்திரனின் உடல் முழுதும் பெண் குறிகளாக ஆகும்படி சாப மிட்டார் அகலிகையின் கணவரான கௌதம முனிவர். பிறகு தேவர்கள் தங்கள் தலைவனுக்கு ஏற்பட்ட பரிபவத்துக்காக மிகவும் வருந்தி இத்தலத்தில் சிவபிரானை வழிபட, அவர்களுக் கிரங்கி முனிவரின் சாபத்துக்கு ஒரு தீர்வு அருளி, சிவபிரான் அக்குறிகளை ஆயிரம் கண்களாக ஆகும்படித் திருவருள் புரிந் தார். இவ்வரலாற்றினை இத்திருப்பாடல் கூறுகிறது.

பெருக்கெண்ணாத பேதையரக்கன் வரைக்கீழால்
நெருக்குண்ணாத்தன் நீள்கழல்நெஞ்சில் நினைந்தேத்த
முருக்குண்ணாதோர் மொய்கதிர்வாள்தேர் முன்னீந்த
திருக்கண்ணாரென் பார்சிவலோகஞ் சேர்வாரே. 8

8. திருக்கயிலை மலையின் பெருமையைச் சிறிதும் மதி யாது அறிவிலியாகிய இராவணன் (அம்மலையைப் பெயர்த் தெடுக்க முயன்றபோது இறைவர் தமது திருவடி விரலால் அழுத்த) அம்மலையின் கீழ் நெருக்குப்படாமல் தப்பித்துக் கொள்ளத் தனது நெஞ்சில் இறைவரது நீண்ட கழலணிந்த திருவடிகளைத் தியானித்துத் தோத்திரஞ்செய்ய (பெருமானும் அதனால் மகிழ்ந்து அவனுக்கிரங்கி) என்றும் அழிவுறாத அடர்ந்த ஒளியுடைய வாளையும், தேரையும் அவனுக் களித்தருளிய சிவபெருமானது திருக்கண்ணார்கோயில் என்று துதிப்பவர்கள் சிவலோகம் சேர்வார்கள்.

வரை - மலை, இங்கு திருக்கயிலையைக் குறித்தது. பெருக்கு - பெருமை, முருக்கு - அழிவு.

செங்கமலப்போ திற்றிகழ்செல்வன் திருமாலும்
அங்கமலக்கண் ணோக்கரும்வண்ணத் தழலானான்
தங்கமலக்கண் ணார்திகழ்கோயில் தமதுள்ளம்
அங்கமலத்தோ டேத்திடவண்டத் தமர்வாரே. 9

9. சிவந்த தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமதேவனும் திருமாலும் அவர்களது ஊனக்கண்களால் (அடிமுடி) காணுத வண்ணம் (அவர்கள் போரிட்ட) அந்த இடத்தில் தீப்பிழம்பின் வடிவுடன் தோன்றிய சிவபிரானுர் தமது உறைவிடமாகக் கொண்டு தங்குகின்ற அமலத்தன்மை விளங்குகின்ற திருக் கண்ணுர்கோயிலைத் தமது அழகிய உள்ளக்கமலத்தில் இருத் தித்துதிக்க, அங்ஙனம் துதிப்பவர்கள் அமரர் உலகத்து இருப்பர்.

இரண்டாவது அடியில் அங்கமலக்கண் என்பதை அங்கு அம் மலக்கண் எனப்பிரித்துப் பொருள் கொள்ளப்பட்டது. அங்கு என்பது அவர்கள் போரிட்ட இடத்தைக் குறித்தது. அம் மலக்கண் என்பது அவர்களது ஊனக்கண்களைக் குறித் தது. பிரமன், திருமால் முதல் எறும்பு வரை சைவ சித்தாந்தப் படி உயிர்களேயாவர். எனவே அவர்கள் ஊனக்கண்ணினரே யெனக் கொள்க. மலக்கண் என்பதற்கு யான் காண்பேன் என அஹங்கரித்த கண் எனவுங்கொள்ளலாம். அப்பர் சுவாமிகள் அருளிய இலிங்கபுராணக் குறுந்தொகையையும் காண்க.

மூன்ருவது அடியில் தங்கமலக் கண்ணுர் திகழ் கோயில் என்பதை தங்கு அமலம் திகழ் கண்ணுர்கோயில் எனப் பிரித்தும் கூட்டியும் பொருள் கொள்ளப்பட்டது. அமலம் — அமலத்தன்மை. அதாவது அறியாமைக்கேதுவாகிய மலம் நீங்கிப்பிரகாசிக்கும் ஞானம் என்பது பொருள். அந்த ஞானம் விளங்கும் திருக்கண்ணுர்கோயிலே இறைவர் தங்குமிடம் என் பதாம். இவ்வாறின்றி, மலமின்மை செய்யும் திருக்கண்ணுர் கோயில் எனக்கொள்ளினும் அமையும்.

நான்காவது அடியில், மூன்ருவது அடியின் பிற்பகுதியான உள்ளம் என்பதுடன் சேர்த்து உள்ளம் அங்கமலத்தோடு என் பதை உள்ளம் அம் கமலத்தோடு எனப்பிரித்து உள்ளமா கிய அழகிய கமலத்தோடு எனப்பொருள் கொள்ளப்பட்டது.

கமலத்தில் எனற்பாலது கமலத்தோடு என வந்தது வேற்றுமை மயக்கம். தமது உள்ளமாகிய அங்கு அமலத்தோடு அதாவது மலமற்றவராய்த் துதிக்க எனவும் பொருள் கொள்ளலாம்.

'உள்ளம் அங்கமலத்தோடு' என்பதால் அகவழிபாடு கூறப்பட்டது என்றும், கண்ணார்கோயில் என்பதால் புறவழிபாடு கூறப்பட்டது என்றும், இருவகை வழிபாடுகளும் கூறப்பட்டன. அகவழிபாடுடையாரும் புறவழிபாட்டைக் கைவிடலாகாது என்பது சித்தாந்தக் கருத்து. திருக்கோயிலில் உள்ள இலிங்கம் முதலிய மூர்த்தங்களில் இறைவர் தங்கிச் சரியை நெறியார்க்கு வெளிப்படாது அருளுவன். கிரியை நெறியாளர்க்கு விறகைக் கடைந்தால் வெளிப்படும் தீப்போலவும், யோகியர்க்குக் கறந்த போதே வெளிப்படும் பால் போலவும், ஞானியர்க்குப் பசுவின் காம்பிலிருந்து பால் விம்மித்தானாகவே ஒழுகுவது போலவும் தோன்றி அருளுவன் என்பது சைவ சித்தாந்தம். ஆகையால் இங்குப் புறம், அகம் ஆகிய இருவகை வழிபாடுகளும் கூறப்பட்டன. [இது இராணிப்பேட்டை புலவர் திரு. பி. மா. சோமசுந்தரனார் அவர்கள் உதவிய குறிப்பு].

தாறிடுபெண்ணைத் தட்டுடையாருந் தாமுண்ணும்
சோறுடையார்சொல் தேறன்மின்வெண்ணூல் சேர்மார்பன்
ஏறுடையன்பர னென்பணிவானிள் சடைமேலோர்
ஆறுடையண்ணல் சேர்வதுகண்ணார் கோயிலே. 10

10. குலை தள்ளுகின்ற பனைமரங்களின் ஓலைகளால் ஆன தடுக்குகளை உடையாகக் கொள்ளும் சமணர்களும், தாம் உண்ணும் சோறே பொருள் எனக்கொண்ட பௌத்தர்களும் சொல்லுகின்ற சொற்களை உண்மையெனக் கொள்ளாதீர்கள். வெண்மையான பூணூல் சேர்ந்த மார்பினையுடையவரும், எருதினை வாகனமாக உடையவரும், எல்லோர்க்கும் மேலான கடவுளும், எலும்பினை உடலில் அணிபவனும், நீண்ட சடையின் மீது ஓர் ஆறாகிய கங்கையை உடைய தலைவனுமாகிய

சிவபெருமான் எழுந்தருளியிருப்பது திருக்கண்ணூர்கோயில் என்ற தலமாகும். (அங்குச் சென்று பெருமானை வழிபடுங்கள் என்று உலகினர்க்கு அறிவுறுத்தியதாகக் கொள்க).

தாறிடு பெண்ணை—குலை தள்ளும் பனை மரங்கள். (பெண் பனை)

தட்டு உடையார்—பனை ஓலையினாலான தடுக்கு என்னும் பனம்பாய்களை உடையாக உடைய சமணர்கள். சமணத் துறவியர்களில் சிலரோ அல்லது அனைவருமோ வெற்றரையாய் (உடையின்றி) இருந்தலோடு சில சமயங்களில் பனந் தடுக்குகளை உடுத்திக் கொள்ளுதலும் உண்டு என்று தெரிய வருகிறது. திருஞானசம்பந்தப் பிள்ளையாரே இதனைச் சில பதிகங்களில் கூறியுள்ளார். உதாரணமாகத் திருவியலூர் பதிகம் 10வது திருப்பாடலில்,

''தடுக்காலுடல் மறைப்பாரவர் தவர்சீவரமூடிப்
பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்தமர் பெரியோர்''

என்று அருளிச்செய்துள்ளது காண்க. 'சீவர மூடிப் பிடக்கே உரை செய்வார்' என்பது பௌத்தர்களைக் குறிப்பதாகையால் 'தடுக்கால் உடை மறைப்பார்' என்பது சமணர்களையே குறித்ததாதல் கண்டு கொள்க. மற்றும் திருப்புகலியில் பாடி அருளிய 'விடையதேறி' எனத் தொடங்கும் செவ்வழிப் பண்ணில் அமைந்த பதிகம் 10ம் பாடலிலும் “தடுக்குடுத்துத் தலையைப் பறிப்பாரோடு சாக்கியர்' என்றவிடத்துத் 'தடுக் குடுத்து' என்ற சொற்றொடரால் சமணர் குறிக்கப்பட்டது தெளிவாதல் காண்க. திருநாரையூர் பழம்பஞ்சுரம் பண்ணில் அமைந்த பதிகம் 10ம் பாடலிலும் ''பின்னொடு முன்னிடு தட்டைச் சாத்திப் பிரட்டே திரிவாரும்'' எனப் பிள்ளையார் சமணர்களைக் குறிப்பிட்டுள்ளார். தட்டு-தடுக்கு. மற்றையவை அவ்வப்பதிக உரைகளில் விளக்கப்படும்.

திருநாவுக்கரசர் புராணத்தில், தருமசேனராய்ச் சூலை நோய் துன்புறுத்தத் தமக்கையார் இருப்பிடம் செல்லத்

துணிந்த மருள்நீக்கியார் (திருநாவுக்கரசரின் பெற்ரோர் இட்ட பெயர்) சமணரை விட்டு நீங்கிய போது, ''உடுத்த பாயொழிய'' எனச் சேக்கிழார் பெருமான் கூறியுள்ளதும் சமணத் துறவியர் பாயினையுடுக்கும் வழக்கம் இருந்தது என்பதைக் காட்டுகிறது.

காமருகண்ணார் கோயிலுளானைக் கடல்சூழ்ந்த
பூமருசோலைப் பொன்னியல்மாடப் புகலிக்கோன்
நாமருதொன்மைத் தன்மையுள்ஞான சம்பந்தன்
பாமருபாடல் பத்தும்வல்லார்மேல் பழிபோமே. 11

திருச்சிற்றம்பலம்.

11. அழகுடைய தலமான திருக்கண்ணார்கோயிலில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானைக் கடல் சூழ்ந்ததும் பூக்கள் மருவிய சோலைகளையுடையதும், பொன்னின் ஒளி பொருந்திய மாடங்களையுடையதுமான திருப்புகலித் தலைவனாகிய திருஞானசம்பந்தனது நாவில் கலந்த பழைமைத் தன்மையுள்ளதும், பாவினிலக்கணம் பொருந்தியதுமான பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்கள்மேல் (வரக்கடவதான) பழிகள் அகன்று போம்.

நாமரு தொன்மைத் தன்மை—நாவிலே கலந்த பழைமைத் தன்மை என்பது ''நற்றவா உனைநான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே'' என்று சுந்தரமூர்த்திகள் அருளிச் செய்தபடி நாவினில் என்றும் கலந்து நிற்கும் சிவபெருமானின் பழைமையான புகழ் என்று கொள்க.

சுவாமி—கண்ணாயிரநாதர்] [தேவி—முருகுவளர்கோதை

சிவம்

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருக்கடைமுடி

பதிகவரலாறு : பெரியபுராணத்தில் திருஞானசம்பந்தர் இத்தலத்தைத் தரிசித்துப் பாடிய காலம் கூறப்படவில்லை யானாலும், திருக்கண்ணார்கோயிலைத் தரிசித்த செய்தி கூறப் பட்ட,

''திருமறைச் சண்பைய ராளி சிவனார் திருக்கண் ணார்கோயில்
பெருவிருப் பாலணைந் தேத்திப் பிஞ்ஞகர் கோயில் பிறவும்
உருகிய அன்பால் இறைஞ்சி உயர்தமிழ் மாலைகொண்டேத்தி
வருபுனற் பொன்னி வடபால் குடதிசை நோக்கி வருவார்''

என்னும் பாடலில் பிஞ்ஞகர் கோயில் பிறவும் என்ற பகுதிக்கு 'இவை திருக்கண்ணார்கோயிலை அடுத்து அணிமையில் உள்ளனவாகிய திருக்கடைமுடி, திருக்காட்டுப்பள்ளி, திரு நாங்கூர் முதலியன என்பது கருதப்படும்' என்ற சிவக்கவிமணி திரு சி. கே. சுப்பிரமனிய முதலியாரவர்கள் உரையைப் பின் பற்றி நாமும் திருக்கண்ணார்கோயிலைத் தரிசித்த பின்னர், இத்தலத்தைத் தரிசித்ததாகக் கொண்டு இப்பதிகத்தை இங்கு அமைத்துள்ளோம். காவிரி வடகரைத் தலவரிசை அமைப்பிலும் இத்தலம் திருக்கண்ணார்கோயிலுக்குப் பின் வைக்கப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது.

பண்-வியாழக்குறிஞ்சி] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

அருத்தனை அறவனை அமுதனைநீர்
விருத்தனைப் பாலனை வினவுதிரேல்
ஒருத்தனை யல்லதிங் குலகமேத்தும்
கருத்தவன் வளநகர் கடைமுடியே. 1

பதிகப்பொழிப்புரை : 1. பொருள் வடிவானவனை, அறத்தின் வடிவானவனை, என்றும் அழியாதவனை (அல்லது இன்பமயமானவனை), முதியவனை, இளையவனை (இவன் யார் என்று) நீங்கள் கேட்பீர்களேயானால் அவர் முழுமுதற் கடவுளாகிய ஒருவனேயாவார். அதுமட்டுமல்லாது தொழுது வணங்குகின்ற உலகத்தினரின் கருத்தினை இடமாகக் கொண்ட சிவபெருமானவர். அவரது வளமையான நகர் திருக்கடைமுடியாகும்.

விருத்தன்—முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள். பாலன்—பின்னைப் புதுமைக்கும் புதுமையானவன். "முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளே பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" (திருவெம்பாவை-9) என்று மாணிக்கவாசகர் இறைவனை அழைப்பதை இங்குக் கொள்க. மற்றும் திருஞானசம்பந்தப் பெருமானே வேறு ஒரு தலப்பதிகத்தில் "விருத்தனாகிப் பாலனாகி" (திருநெடுங்களம் பதிகம், 6ம் பாடல்) என அருளிச் செய்துள்ளதையும், "விருத்தனாகிப் பாலனாகி விரிநிலா எறிக்கும் சென்னி" என அப்பரடிகள் (4ம் திருமுறை, கோயில்பதிகம், 9ம் பாடல்) அருளிச்செய்துள்ளதையும் இங்குக் கொள்க. இறைவரை விருத்தன் என்றும் பாலன் என்றும் குறிப்பிட்டுள்ள இடங்கள் திருமுறைகளில் இன்னும் உள. அவை வந்துழி விளக்கப்படும்.

ஒருத்தனை—ஒருத்தன்+ஐ. (ஐ சாரியை) சிவபெருமானே "தனிமுதலாம்பரன்" என்பது பொருள்.

கருத்தவன் — கருத்தினை இடமாகக் கொண்டவன். கருத்து என்ற சொல்லுக்கு எண்ணம், கவனம், குறிப்பு, சித்தம், சிந்தனை, தாத்பர்யம், நினைப்பு முதலிய பொருள்களுடன் பலன் என்றொரு பொருளும் உளதாகையால் ஏத்தும் உலகமக்களுக்குப் பயனானவன் என்றோ உலகத்தினரது ஏத்துதலுக்குப் பயனானவன் என்றோ பொருள் கொள்ளலாம்.

திரைபொரு திருமுடி திங்கள்விம்மும்
அரைபொரு புலியதள் அடிகளிடம்
திரையொடு நுரைபொரு தெண்சுனைநீர்
கரைபொரு வளநகர் கடைமுடியே. 2

2. கங்கா நதியின் அலைகள் பொருதலையுடைய, பிறைச் சந்திரனின் ஒளி விம்மும் திருமுடியை உடையவரும், அரையிலே உடையாகப் புலியின் தோலையுடையவருமாகிய சிவபிரானது இடம், அலைகளோடு நுரையும் கூடிய தெளிந்த சுனையின் நீர் கரையை மோதுதலை உடைய வளமிக்க திருக் கடைமுடியாகும்.

திரை—அலை; திங்கள் — இங்குத் திங்களின் ஒளியைக் குறித்தது. விம்முதல்—பெருகுதல், மிகுதல். புலியதள்—புலித் தோல்.

ஆலிள மதியினொ டரவுகங்கை
கோலவெண் ணீற்றனைத் தொழுதிறைஞ்சி
ஏலநன் மலரொடு விரைகமழும்
காலன வளநகர் கடைமுடியே. 3

3. இளம்பிறைச்சந்திரனோடு பாம்பு கங்கை முதலியவை களையுடைய, அழகிய வெண்ணீறு தரித்த திருமேனியனை சிவபிரானைத் தொழுது வணங்க (அதனால்) மணமுடைய நல்லமலர்களோடு தூபமாகிய நறும்புகையின் மணமும் கமழும் திருவடியையுடைய அப்பெருமானது வளமையான நகர் திருக்கடைமுடியாகும்.

தொழுதிறைஞ்சி என்பதில் ‘இறைஞ்சி’ என்பதை ‘இறைஞ்ச’ என மாற்றிப் பொருள் கொள்ளப்பட்டது.

ஏலம்—வாசனை; விரை—தூபம், நறும்புகையின் மணம். கமழ்தல்—மணம் பரவுதல்.

காலன—காலன்+அ. காலன்—காலை உடையவன். 'அ' ஆறும் வேற்றுமை உருபு. எனவே 'காலையுடையவனுடைய' என்று பொருள் கொள்ளப்பட்டது.

கொய்யணி நறுமலர்க் கொன்றையந்தார்
மையணி மிடறுடை மறையவனூர்
பையணி அரவொடு மான்மழுவாள்
கையணி பவனிடங் கடைமுடியே. 4

4. கொய்து அணியப்பெற்ற மணம் மிக்க கொன்றை மலர் மாலையுடையவனும், விஷத்தை அணியாகக் கொண்ட கழுத்தையுடையவனும், வேதப் பொருளானவனும், படமெடுத்து ஆடும் பாம்போடு மான் மழுவாயுதம் இவைகளைக் கையில் அணிந்தவனுமாகிய சிவபிரானின் இடம் திருக்கடைமுடியாகும்.

மை—விடம்; பை—பாம்பின் படம்.

மறையவன் உலகவன் மாயமவன்
பிறையவன் புனலவன் அனலுமவன்
இறையவன் எனவுல கேத்துங்கண்டம்
கறையவன் வளநகர் கடைமுடியே. 5

5. வேதங்களின் வடிவானவனும், உலகமாயிருப்பவனும் மாயையாயிருப்பவனும், திங்களாயிருப்பவனும், தண்ணீராய் இருப்பவனும், தீயாய் இருப்பவனும், எல்லா உயிர்களிலும் உள்ளும் புறமும் தங்கியிருப்பவன் என உலகத்தினர் துதித்து வணங்கும் கறைக்கண்டனுமாகிய சிவபிரானின் வளமையான நகர் திருக்கடைமுடியாகும்.

மறை என்பது சொற்பிரபஞ்சத்தையும், உலகு என்பது பொருட்பிரபஞ்சத்தையும், மாயம் என்ற மாயை இவ்விரு பிரபஞ்சங்களின் தோற்றத்துக்குக் காரணமாகிய சுத்தம் அசுத்தம்

என்ற இருவகையான மாயைகளையும் குறிக்கும். இறைவன் இவையாக இருப்பவன் என்று கூறியதாம்.

பிறை—என்று சந்திரனைக் கூறியதால் அதன் இனமான சூரியனைக் கொள்ள இருசுடர்களையும், புனல், அனல் என்று இரு பூதங்களையும் கூறியதால் அவற்றின் இனமான நிலம், காற்று, ஆகாயம் இவைகளையும் கொள்ள ஐம்பெரும் பூதங்களையும், இறையவன் என்பது உயிருக்குள் உயிராக இருக்கும் தன்மையைக் குறிப்பதால் ஆன்மாவையும் ஆக இறைவரது அட்ட மூர்த்தியாம் தன்மையை உணர்த்திய வாறு கண்டு கொள்க. இப்பாடலால் எல்லாமாயிருப்பவன் சிவபிரான் என்பதைத் திருஞானசம்பந்தர் தெளிவுபடுத்தி உள்ளார் என்பதறிந்து இன்புறுக.

மாயையைப் பற்றிய விளக்கம் நம் தமிழ்மாலை-19, பக்கம் 13ல் காண்க.

படவர வேரல்குல் பல்வளைக்கை
மடவர லாளையொர் பாகம்வைத்துக்
குடதிசை மதியது சூடுசென்னிக்
கடவுள்தன் வளநகர் கடைமுடியே. 6

6. உமாதேவியாரை ஒரு பாகத்தில் வைத்து இளம் பிறைச் சந்திரனைச் சூடிய தலையையுடைய கடவுளாகிய சிவ பிரானது வளமையான நகர் திருக்கடைமுடியாகும். 'பட வரவேரல்குல்' என்பது முதல் 'மடவரலாள்' வரையுள்ளவை உமாதேவியாரைக் குறிக்கும் சொற்றொடர்களாகும்.

குடதிசை — மேற்குத்திசை. பிறைச்சந்திரன் வானத்தில் மேற்குத்திசையில் தோன்றுவதால் இளம் பிறையைக் குட திசைமதி எனக்குறிப்பிட்டருளினர் போலும்.

பொடிபுல்கு மார்பினிற் புரிபுல்குநூல்
அடிபுல்கு பைங்கழல் அடிகளிடம்
கொடிபுல்கு மலரொடு குளிர்சுனைநீர்
கடிபுல்கு வளநகர் கடைமுடியே. 7

7. திருநீறு பூசிய மார்பினில் பூணூலும், திருவடிகளிலே வீரக்கழல்களையும் பூண்ட முழு முதற்கடவுளாகிய சிவபிரானது இடம், முல்லை முதலிய கொடிகளில் பொருந்திய மலர்களும் குளிர்ந்த சுனைநீரும் உடைய காவல் பொருந்திய வளநகராகிய திருக்கடைமுடியாகும். பொடி — திருநீறு; புல்குதல் — பொருந்துதல், சேர்தல் முதலிய பொருள்கள்.

நோதல்செய் தரக்கனை நோக்கழியச்
சாதல்செய் தவனடி சரணெனலும்
ஆதர வருள்செய்த அடிகளவர்
காதல்செய் வளநகர் கடைமுடியே. 8

8. இராவணனை வருத்தி அவனது உயர்வு கெடும்படி வலிமையை அழியச்செய்து, பின்னர் அவன் 'திருவடியே சரணம்' எனத்துதித்ததும் அவனுக்கு விருப்புடன் (ஆயுளும் வாளும்) அருள் செய்த கடவுளாகிய சிவபிரான் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள வளமையான நகர் திருக்கடைமுடியாகும்.

நோதல் செய்து — வருந்தும்படிச்செய்து. நோக்கழிய - நோக்கு - உயர்ச்சி. "நோக்கமே அழகு, பார்வை, நொய்திலா உயர்ச்சியாகும்" என்பது அரும்பொருள் விளக்க நிகண்டு. இது வரையில் எவரிடத்தும் வலிமிழந்து கெடாதிருந்த உயர்ச்சி இங்கு இறைவனால் அழியும்படிச் செய்யப்பட்டது. இதனையே "நோக்கழியச் சாதல் செய்து" என்ற இப்பாடற்பகுதி தெளிவுபடுத்துகின்றது.

ஆதரவு — அன்பு, விருப்பம், உதவி.

அடிமுடி காண்கிலர் ஓரிருவர்
புடைபுல்கி அருளென்று போற்றிசைப்பச்
சடையிடைப் புனல்வைத்த சதுரனிடம்
கடைமுடி யதனயல் காவிரியே. 9

9. திருவடியையும் திருமுடியையும் கண்டறிய இயலாத பிரமவிட்டுணுக்களாகிய இருவரும் சிவபிரானை அணுகிச் சென்று "திருவருள் புரிவாய்" என்று வணங்கித் துதித்து நிற்கத் தன் சடைமுடியில் கங்கையை வைத்து உலகைக் காத்தருளிய சதுரனாகிய சிவபிரானது இடம் காவிரியின் அருகில் உள்ள திருக்கடைமுடியாகும். ('காவிரியதனயல் கடைமுடியே' எனமாற்றிப் பொருள் உரைக்கப்பட்டது)

கங்கையின் வேகத்தைத் தாங்கி உலகைக் காத்தருள்வாய் எனப்பிரம விட்டுணுக்கள் இருவரும் சிவபிரானை அடைந்து வேண்டினர் என்பது இப்பாடல் கூறும் செய்தியாகும்.

சதுரன்—திறமையுடையவன்.

மண்ணுதல் பறித்தலும் மாயமிவை
எண்ணிய காலவை இன்பமல்ல
ஒண்ணுதல் உமையையொர் பாகம்வைத்த
கண்ணுதல் வளநகர் கடைமுடியே. 10

10. பௌத்தர்களது நீரில் மூழ்கும் செயலும் சமணர்களது தலைமயிரை ஒவ்வொன்றாகப் பறிக்கும் செயலும் ஆகிய இவைகள் யாவும் வெறும் மாயம். ஆராய்ந்து பார்க்குங்கால், இவை இன்பமாகா. ஒளி பொருந்திய நெற்றியையுடைய உமாதேவியாரை ஒரு பாகத்தில் வைத்த நெற்றிக் கண்ணனாகிய சிவபிரானது இடம் திருக்கடைமுடி யாகும். (அங்குச் சென்று பெருமானை வழிபடுவதே இன்பம் எனக் குறிப்பாலுணர்த்தியதாகக் கொள்க.)

மண்ணுதல்—கழுவுதல். முழுகுதல் எனக் கொண்டோம். இப்பொருளேயன்றிக் கழுவுதல் என்பது ஒரு பொருளின் அழுக்கு நீக்குதற் பொருட்டாகலின் நீக்குதல் எனக் கொண்டு தலைமயிரை நீக்குதல் அல்லது மழித்தல் எனவும் கொள்ளலாம். தலை மயிரை மழித்தல் பௌத்த பிட்சுக்களின் செயலாம்.

பறித்தல்—தலைமயிரை ஒவ்வொன்ருகப் பறித்தல் சமணர் களது செயல்.

இன்பம் ஆகா—இன்பத்துக்குக் காரணம் ஆகமாட்டா.

பொன்திகழ் காவிரிப் பொருபுனல்சீர்
சென்றடை கடைமுடிச் சிவனடியை
நன்றுணர் ஞானசம் பந்தன்சொன்ன
இன்றமிழ் இவைசொல இன்பமாமே. 11

திருச்சிற்றம்பலம்

11. அழகு திகழ்கின்ற காவிரியின் கரையை மோது கின்ற நீரின் சிறப்புச் சென்றடைகின்ற திருக்கடைமுடியில் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானது திருவடிகளை, உலகுக்கு நல்லனவற்றையெல்லாம் அறிந்ததிருஞானசம்பந்தன் பாடிய இனிய தமிழ்ப்பாடல்களாகிய இவற்றைச் சொல்லப் பேரின்பம் உண்டாகும்.

பொரு புனல்—கரையை மோதுகின்ற நீர். இதனுல் காவிரியின் நீர் வளம் கூறப்பட்டது.

புனல் சீர்—நீரின் சிறப்பு அதாவது வளம் எனக்கொண்டு பொருள் உரைக்கப்பட்டது. இவ்வாறின்றி ''சீர் சென்றடைச் சிவனடியை'' என்று கொண்டு ''உரைப்பார் உரைக்கும் புகழ் களை உரியான் இவன் என உணராதே உரைப்பினும் சென்ற டைவது சிவனையே என்பதாம்'' என்பது தருமையாதீனக் குறிப்புரை.

பொன்திகழ் காவிரி—பொன் என்பதற்கு அழகு எனப் பொருள் கொள்ளாது "பொன்னியெனப் பெயர் தாங்கித் திகழ்கின்ற காவிரி" என்பதும் தருமையாதீனக் குறிப்புரை.

நன்றுணர் ஞானசம்பந்தன்—நல்லன யாவை என்பதை திருவருள் உணர்த்த உணர்ந்த திருஞானசம்பந்தர்.

இன்பம்—பேரின்பத்தைக் குறித்தது. மோட்சம் என்பதாம்.

சுவாமி: கடைமுடிநாதர்] [தேவி: அபிராமியம்மை

சிவம்

---

## திருஞானசம்பந்தர் துதி

இருமுது மாதர் தங்கூன் இருகரங் கொடுமுயன்று
கருதுறத் தீர்த்த தாச ரதியுங்கண் ணனுநாண் கொள்ளக்
குருமதிக் குலத்து வேந்தன் கூனெரு சொல்லால் தீர்த்த
பொருவருங் காழி ஞான பூரணற் கடிமை செய்வாம்.

—மஹாவித்துவான் திரிசிரபுரம் மீனுக்ஷிசுந்தரம் பிள்ளை
திருநாகைக் காரோணப் புராணம்.

மந்தரை, திரிவக்கரை என்ற இரண்டு முதிய மாதர்களது கூன்களை இரண்டு கைகளைக் கொண்டு மிக்க முயற்சியுடன் முறையே தீர்த்த இராமனும் கண்ணனும் வெட்கமடையும்படி சந்திரகுலத்து அரசனை கூன்பாண்டியனது கூனை "வேந்தனும் ஓங்குக" என்ற ஒரு வார்த்தையினல் தீர்த்தருளிய ஒப்பற்ற சீகாழியிலவதரித்த திருஞானசம்பந்தப் பெருமானுக்கு அடிமையாகித் தொண்டு செய்வோமாக.

உ
சிவமயம்
ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருப்புள்ளிருக்குவேளூர்

## (வைத்தீசுவரன்கோயில்)

பதிக வரலாறு! திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருக்கண்ணார்கோயிலையும் திருக்கடைமுடி முதலிய பிஞ்ஞகனார் கோயில் பிறவுங் கண்டு களித்துக் காவிரி வடபால் மேற்குத் திசை வருவாராய்க் காதல் பெருகச் சடாயு சம்பாதி என்ற இரு கழுகுகள் வழிபட்டுப் பேறு பெற்ற திருப்புள்ளிருக்கு வேளூர்க் கோயிலை அடைந்தார். அங்குக் கோயில்கொண்டு உள்ள அனைத்துலகுக்கும் பிறவிப் பிணி தீர்க்கும் ஒரே வைத்தியனான வைத்தியநாதப் பெருமானை வணங்கி, அப்புள் வேந்தர் இருவரும் அன்புடன் ஆற்றிய பூசையைச் சிறப்பித்து இந்த நற்றமிழ் மாலையாம் திருப்பதிகத்தைப் பாடியருளினார்.

பண்: சீகாமரம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

கள்ளார்ந்த பூங்கொன்றை மதமத்தங் கதிர்மதியம்
உள்ளார்ந்த சடைமுடியெம் பெருமானா ருறையுமிடம்
தள்ளாய சம்பாதி சடாயென்பார் தாமிருவர்
புள்ளானார்க் கரையனிடம் புள்ளிருக்கு வேளூரே 1

பதிகப்பொழிப்புரை-1. தேன் நிறைந்த அழகிய கொன்றை மலரும், கடுநாற்றத்தையுடைய ஊமத்தம் பூவும், ஒளியுடைய பிறைச்சந்திரனும் உள்ளே தங்கப் பெற்ற சடை முடியையுடைய எமது பெருமானாகிய சிவபிரானார் உறையும் இடம்-தாழ்ந்த பறவையினத்தைச் சேர்ந்தவை எனக் கருதி தள்ளி விடத்தகாத சடாயு-சம்பாதி என்பாராகிய பறவைப் பிறப்பை

அடைந்து வழிபட்ட இருவருக்கும் தலைவராகிய சிவபெருமானது இடம்—திருப்புள்ளிருக்குவேளூர் என்ற வைத்தீசுவரன் கோயிலாகும். (வைத்தீசுவரன் கோயில் என்ற பெயரை ஒவ்வொரு பாடலுக்கும் கொள்க).

எம்பெருமான் உறையுமிடமும், புள்ளானூர்க்கரையன் இடமும் திருப்புள்ளிருக்குவேளூரேயாகும். சம்பாதி சடாயு யென்பார்தாம் புள்ளானூர் இருவர்க்கு அரையன் (சிவபிரான்) என்று எம்மால் பொருள் கொள்ளப்பட்டது இவ்வாறின்றி சடாயு சம்பாதி என்ற இருவருள் பறவைகளுக்கு அரசாகிய சடாயுவின் இடம் எனவும் சிலர் உரை கூறுவர். புள்-பறவை

தள்ளாய—என்பதற்கு வலிமை பொருந்திய என்றும் சிலர் உரை கூறுவர்

திருப்புள்ளிருக்குவேளூர் என்ற தலப் பெயர்க் காரணத்தில் ஒன்ருன, சடாயு-சம்பாதி ஆகிய புட்கள் வழிபட்ட வரலாறு இப்பாடலிற் கூறப்பட்டது. மேல் 2, 4, 6, 8, 9, 10 வது பாடல்களில் சடாயுவின் வழிபாட்டையும், 3, 5, 7வது பாடல்களில் சம்பாதியின் வழிபாட்டையும் தனித்தனியாகக் கூறியுள்ளார். 11வது திருப்பாடலில் இருவரும் வழிபட்டதைக் குறிப்பிட்டுள்ளார்.

தையலா ளொருபாகஞ் சடைமேலா ளவளோடும்
ஐயந்தேர்ந் துழல்வாரோ ரந்தணரு ருறையுமிடம்
மெய்சொல்லா இராவணனை மேலோடி யீடழித்துப்
பொய்சொல்லா துயிர்போனான் புள்ளிருக்கு வேளூரே. 2

2. உமாதேவியார் ஒரு பாகத்திலும், சடைமேல் கங்காதேவியுடனும் பிச்சையெடுத்துத் திரிவாராகிய ஓரந்தணர் (சிவபிரான்) உறையுமிடம், மெய் சொல்லாத இராவணனை வானிற்பறந்து போர் செய்து அவனது வலிமையழித்துத் தான் பொய்சொல்லாது உயிர் துறந்தவனாகிய சடாயு வழிபட்ட திருப்புள்ளிருக்குவேளூராகும்.

தையலாள் — உமாதேவியார். இத்தலத்து அம்பிகையின் திருநாமம் தையல்நாயகி என்பதும் குறிப்பிடப்பட்டது;

வாசநலஞ் செய்திமையோர் நாடோறும் மலர்தூவ
ஈசனெம் பெருமானார் இனிதாக உறையுமிடம்
யோசனைபோய்ப் பூக்கொணர்ந்தங் கொருநாளும் ஒழியாமே
பூசனைசெய் தினிதிருந்தான் புள்ளிருக்கு வேளூரே. 3

3. தேவர்கள் வாசநலம் செய்து நாள்தோறும் மலர்தூவி வழிபட எம்பெருமானாராகிய ஈசனார் இனிதாக எழுந்தருளியிருக்குமிடம், ஒரு நாள்கூடத் தவருமல் ஒரு யோசனை தூரம் போய்ப் பூக்கொண்டுவந்து பூசித்து அதனால் மகிழ்ச்சியுடன் இருந்த சம்பாதியின் ஊராகிய திருப்புள்ளிருக்குவேளூர் ஆகும்.

வாசநலம — சந்தனம், குங்கிலியம் முதலிய நறுமணம் ஊட்டும் பொருள்கள். இவ்வாறின்றி வாசம் என்பதற்குத் தலவாசம் என்றும், நலம் என்பதற்கு தீர்த்த ஸ்நானம், மூர்த்தி தரிசனம் முதலியன என்றும் உரைத்தார் திருத்தருமையாதீன குறிப்புரையாசிரியர்.

இமையோர்—பிரம்மா, சூரியன், செவ்வாய் முதலிய தேவர்கள். திருமால் இராமாவதாரத்தில் இலட்சுமணனுடன் வழிபட்டுள்ளார். முருகப் பெருமானும் வழிபட்டதாகத் தல புராணம் கூறும். இதனைப் பின்வரும் வைத்தியநாதாஷ்டகம் முதலாவது சுலோகத்தாலும் அறிந்து கொள்ளலாம்.

*ஸ்ரீராமஸௌமித்ரி ஜடாயுவேத
ஷடானனாதித்ய குஜார்ச்சிதாய
ஸ்ரீநீலகண்டாய தயாமயாய
ஸ்ரீவைத்யநாதாய நமச்சிவாய.

---

*ஸ்ரீ வைத்தியநாதாஷ்டகம், ஸ்ரீபாலாம்பிகாஷ்டகம் இவை தமிழ் உரையுடனும், மற்றும் தலவரலாறு முதலியனவையும் நமது வெளியீடான ''ஸ்ரீவைத்தீசுவரன்கோயில் தல மஹிமையும் தோத்திரங்களும்'' என்ற நூலில் காணலாம்.

"ஸ்ரீராமன், லக்ஷ்மணன், ஜடாயு, நான்கு வேதங்கள், ஆறுமுகப் பெருமான், சூரியன், அங்காரகன் (செவ்வாய்) இவர்களால் பூஜிக்கப்பட்டவரும், விஷத்தைக் கழுத்தில் தரித்து நீலகண்டரானவரும் கருணையே வடிவமாக உள்ளவருமான ஸ்ரீவைத்தியநாதன் என்ற சிவபிரானை நமஸ்கரிக்கிறேன்" என்பது மேற்காட்டப்பட்ட சுலோகத்தின் பொருள் ஆகும். 'வேத' என்ற சொல்லினால் பிரமதேவனையுங் கொள்ளலாம்

மலர் தூவுதல்—மலர்களைக் கொண்டு அருச்சனை செய்தல்

யோசனை—நான்கு கூப்பிடு தூரம், சுமார் 10 மைல்கள்

பூசனைசெய்தினிதிருந்தான்–இது சம்பாதியைக் குறிக்கும். இவன் காவிரிப்பூம்பட்டினத்தில் பூந்தோட்டம் வைத்து நாள் தோறும் அங்கிருந்து மலர் பறித்து வந்து இத்தலத்தில் சிவ பெருமானை வழிபட்ட வரலாறு இப்பாடலில்கூறப்படுகிறது.

மாகாயம் பெரியதொரு மானுரிதோல் உடையாடை
ஏகாயம் இட்டுகந்த எரியாடி உறையுமிடம்
ஆகாயம் தேரோடும் இராவணனை அமரின்கண்
போகாமே பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 4

4. பருத்த உடலையுடைய பெரியதொரு யானையின் உரித்த தோலை உடுக்கும் ஆடை போலப் போர்வையாகத் தரித்து மகிழ்ந்த, தீயினைக் கையில் வைத்து ஆடும் இறைவன் எழுந்தருளியிருக்கும் இடம், ஆகாயத்தில் ஓடும் ஊர்தியாகிய புட்பக விமானத்தில் பறந்து வந்த இராவணனை மேற்கொண்டு செல்லாதவாறு அவனுடன் செய்தபோரில் பொருது அவனது வலிமையை அழித்தவனாகிய சடாயு வழிபட்ட தலமாகிய திருப்புள்ளிருக்குவேளூர் ஆகும்.

காயம்—உடல். காயம் என்பதை இறைவனுக்கே ஆக்கி, பெரிய திருமேனியும் அதன் மீது யானையின் உரித்த தோல் உடையாடை போர்த்தவன் எனவும் கொள்ளலாம்

மான்உரி—மான் என்ற சொல்லுக்கு விலங்கின் பொது என்ற பொருளும் உளதாகையாலும், தோலையுரித்துப் போர்த்துக்கொண்டது யானையின் தோலையேயாகையாலும், மாகாயம், பெரியதொரு என்ற அடைமொழிகளாலும், மான் என்ற சொல்லுக்கு இங்கு யானை என்று பொருள் கொள்ளப்பட்டது. மான் என்ற குறிப்பிட்ட மிருகத்தை உரித்துப் போர்த்ததாக வரலாறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. புலித்தோலை அரையில் உடையாகவும் யானைத்தோலைப் போர்வையாகவும் கொண்டார் இறைவர் என்றே புராணங்கள் கூறுகின்றன. ஏகாயம்—உத்தரீயம். இங்குப் போர்வையைக் குறித்தது.

எரியாடி—கையில் தீயுடன் ஆடும் பெருமான். ஆகாயம் தேரோடும்-இதனை ஆகாயம் ஓடும் தேர் எனமாற்றி இராவணனது புட்பக விமானத்தைக் கொள்க. இவ்விமானம் முன்னர்க் குபேரனுடையதாக இருந்து, இராவணனால் கவர்ந்து கொள்ளப்பட்டதென அறிக.

அழித்தான்—வலிமையை அழித்தவனாகிய சடாயு.

கீதத்தை மிகப்பாடும் அடியார்கள் குடியாகப்
பாதத்தைத் தொழநின்ற பரஞ்சோதி பயிலுமிடம்
வேதத்தின் மந்திரத்தால் வெண்மணலே சிவமாகப்
போதத்தால் வழிபட்டான் புள்ளிருக்கு வேளூரே. 5

5. இறைவரது புகழ்களை எடுத்துக்கூறும் இனிய இசைப் பாடல்களை மிகவும் பாடுகின்ற அடியார்கள் தங்களுக்குப் புகலிடம் என்று திருவடிகளைத் தொழும்படி நின்ற பரஞ்சோதியாகிய சிவபெருமான் தங்குமிடம், வெண்மையான மணலைச் சிவபெருமானாகத் தன் ஞானத்தினால் பாவித்து வேதமந்திரங்களைக் கொண்டு வழிபட்டவனாகிய சம்பாதியினுடைய திருப்புள்ளிருக்குவேளூர் ஆகும்.

கீதம் — இனிய இசையுடன் கூடிய பாடல்கள். இதே பதிகம் 8வது திருப்பாடலில் மீண்டும் இசைபாடும் அடியார்

களுக்கு இறைவர் அருள்செய்வது பற்றிப் பாடியுள்ளது காண்க. வேறு ஒரு திருப்பதிகத்திலும் (1ம் திருமுறை 71ம் பதிகம் 8ம் பாடல்) திருஞானசம்பந்தப் பிள்ளையார் "மனம் ஒன்றி உரையார் கீதம்பாட நல்ல உலப்பில் அருள்செய்தார்" என்று அருளிச் செய்துள்ளதும், திருநாவுக்கரசர், "அளப்பில கீதஞ்சொன்னார்க்கு அடிகள் தாம் அருளுமாறே" என்று அருளிச் செய்துள்ளதும் ஈண்டுக்கருதுக. (4ம் திருமுறை, 77ம் பதிகம், 3ம் பாடல்)

குடி—வீடு என்றொரு பொருளும் உள்ள இச்சொல்லுக்குப் புகலிடம் என்று ஈண்டுப் பொருள் கொள்ளப்பட்டது.

பரஞ்சோதி — உலகிற்கு ஒளிதரும் சூரியன், சந்திரன், அக்னி மற்றும் உள்ள எல்லா ஒளிகளுக்கெல்லாம் ஒளி கொடுத்துத் தனக்கு ஒளி கொடுக்க வேறு எதுவும் அல்லது எவருமின்றி தனக்குத் தானே ஒளியாகி நிற்கும் மேலான ஒளி. பரம் - மேலான.

போதம்-ஞானம். வெண்மணலைச் சிவமாகப் பாவித்தற்குக் காரணம் அவனது ஞானமேயாகும். சண்டேச நாயனார் மண்ணி ஆற்றங்கரை மணலில் இறைவர் திருமேனி அமைத்துப் பாலினால் அபிடேகம் செய்ததும் இங்குக் கொள்க. அத்தகைய ஞானம் கைவரப்பெருமையே அவ்வூர் அந்தணர்கள் மணலில் வீணே பாலை உகுத்தார் என்று அவர் மீது குற்றம் சாட்டியதற்குக் காரணம் என்பதும் அறிந்து தெளிக.

திறங்கொண்ட அடியார்மேல் தீவினைநோய் வாராமே
அறங்கொண்டு சிவதன்மம் உரைத்தபிரா னமருமிடம்
மறங்கொண்டங் கிராவணன்றன் வலிகருதி வந்தானைப்
புறங்கண்ட சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 6

6. சைவத்திறத்தினை மேற்கொண்ட அடியார்கள் மீது தீவினையைக் காரணமாகக் கொண்ட பிறவி நோய் வந்து

சாராமல் அவர்கள்மீது கருணையுடன் சிவதருமங்களை உரைத் தருளிய சிவபிரான் விரும்பி எழுந்தருளியிருக்குமிடம், தனது வலிமையையே பெரிதாக மதித்து அங்கு வந்த கொடியவ னாகிய இராவணனை வென்றவனாகிய சடாயு வழிபட்ட திருப் புள்ளிருக்குவேளூர் ஆகும்.

திறம்—சைவத்திறம், சிவநெறியில் ஒழுகுதல்.

தீவினைநோய்—தீவினையாகிய நோய் என்றோ, தீவினையால் வரும் நோய் என்றோ கொள்க.

அறம் — இச்சொல்லுக்கு உரிய பல பொருள்களுடன் ''பெரியோர் இயல்புகளில் ஒன்று'' என்ற பொருளும் உளதால் ''கருணை'' என்று கொள்ளப்பட்டது. இறைவனார் சிவதன்மம் உரைத்தமைக்குக் காரணம் சைவத்திறத்தில் ஒழுகும் அடி யார்கள் மீது கொண்ட கருணையேயாகும்.

சிவதன்மம்—சிவநெறியைப் போதிக்கும் சைவாகமங்கள். இவை இருபத்தெட்டு என்றும், இவைகளைப் பெருமான் தமது ஈசான முகத்தினின்றும் தோற்றுவித்தார் என்றும் கூறுவர்.

புறங்கண்ட — எதிரியின் முதுகு பார்த்தல் என்பது அவனைத் தோற்று ஓடும்படிச் செய்தலாகும். எனவே வெற்றி யடைந்ததைக் குறித்தது. சடாயுவைக் கொன்றுவிட்டு இரா வணன் சீதையோடு விமானத்தில் இலங்கைக்குச் சென்றுவிட் டான் என்பது தேற்றமாயிருக்க, இராவணனைப் புறங்கண் டான் என்று இப்பாடலிலும், பொருதழித்தான் என்று மற்ற பாடல்களிலும் கூறியுள்ளது எங்ஙனம் பொருந்தும் என்ற ஐயம் எழக்கூடும். சடாயுவினால் தாக்கப்பட்டு அவனது ஆற்ற லால் இராவணன் வலியழிந்து நின்றது கம்பராமாயணம், சடாயு உயிர் நீத்த படலம், 107ம் பாடல் முதல் 128ம் பாடல் வரையுள்ள 22 பாடல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. 'சடாயுவின் ஆற்றலுக்கு இளைத்ததனால் வெட்கமடைந்த

இராவணன்' என்று 130ம் பாடல் கூறுகிறது. எனவே இரா வணன் வலியழிந்தது தேற்றம். அங்ஙனமாயின் வலியழிந்த இராவணன் எங்ஙனம் சடாயுவை உயிரிழக்கச் செய்தான் எனின், சிவபிரான் அளித்த சந்திரகாசமென்னும் வாட்படை யினாலேயே அதனை இராவணன் செய்ய இயன்றது என்பது அதே படலம் 128ம் பாடல் தெளிவாகக் கூறுகிறது.

''வலியின் தலைதோற்றிலன் மாற்றருந் தெய்வ வாளால்
நலியுந் தலையென்றது வன்றியும் வாழ்க்கை நாளும்
மெலியுங் கடைசென்றுள தாகலின் விண்ணின் வேந்தன்
குலிசம் மெறியச் சிறையற்றதொர் குன்றின் வீழ்ந்தான்''

(இதன் பொருள்) ''எவராலும் தடுக்கவொண்ணாத தெய்வத் தன்மையுள்ள (அந்தச்சிவபிரானது) வாளால் யாவர் தலையும் தவருது அழியும் என்ற அதன் சிறப்புமட்டுமல்லாமல் தனது ஆயுளும் குறைவுபடுகிற முடிவை அடைந்தபடியால் தனது வலிமையில் சிறிதும் தோல்வி பெருதவனாகிய அந்தச்சடாயு, இந்திரன் வச்சிராயுதத்தை வீச அதனால் சிறகற்று வீழ்வ தொரு மலை போலத் தன் சிறகுகள் அறுபட்டுக் கீழே விழுந் தான்'' என்பதாம்.

இதனையே கம்பர் சீதாதேவியின் வாய்மொழியாகப் பிறி தோரிடத்தும் தேற்றம் செய்துள்ளதை,

''தோற்றனை பறவைக்கன்று துள்ளுநீர் வெள்ளம் சென்னி
ஏற்றவன் வாளால் வென்ருய் இன்றெனின் இறத்தி
அன்றே''

என்ற சுந்தரகாண்டம், நிந்தனைப்படலம், 43-ம் பாடல் பகுதி யால் தெளிக.

(இதன் பொருள்) அந்நாளில் சடாயு என்ற பறவைக்கு நீ தோற்ருய். துள்ளுகின்ற நீரினையுடைய கங்கையைத் தலை யில் தாங்கிய சிவபிரான் அளித்தருளிய வாளினால் அந்த

சடாயுவை (வெட்டிக்கொன்று) வெற்றி பெற்றாய். அந்த வாள் இல்லையானால் அன்றே நீ இறந்து போயிருப்பாய்'' என்பதாம்.

அத்தியின் ஈருரிமூடி அழகாக அனலேந்திப்
பித்தரைப்போல் பலிதிரியும் பெருமானார் பேணுமிடம்
பத்தியினால் வழிபட்டுப் பலகாலந் தவஞ்செய்து
புத்தியொன்ற வைத்துகந்தான் புள்ளிருக்கு வேளூரே. 7

7. உரித்த யானையின் தோலைக்கொண்டு திருமேனியை போர்த்திக் கொண்டு, கையில் அழகாகத் தீயையும் ஏந்திப் பித்துப்பிடித்தவர் போலப் பிச்சைக்கு வீடுகள் தோறும் திரிந்த பெருமானார் விரும்பியுறையுமிடம், பக்தியுடன் வழிபட்டுப் பல காலம் தவஞ்செய்து தனது அறிவானது சிவத்தோடு பொருந்துமாறு செய்து அதனால் உயர்ச்சி பெற்றவனாகிய சம்பாதியினுடைய திருப்புள்ளிருக்குவேளூர் ஆகும்.

புத்தி — அறிவு, ஞானம். ஒன்றுதல் — பொருந்தியிருத்தல். ''ஒன்றியிருந்து நினைமின்கள்'' என்று அப்பரடிகள் அருளியதும் இங்குக் கருதுக.

உகந்தான் — உயர்ந்தான், அதாவது நற்கதி பெற்றான் என்பதாம். மகிழ்ச்சியடைந்தான் என்ற பொருளைவிட உயர்ந்தான் என்பதே இங்கு அதிகப்பொருத்தமுடையதாம்.

பண்ணொன்ற இசைபாடும் அடியார்கள் குடியாக
மண்ணின்றி விண்கொடுக்கும் மணிகண்டன் மருவுமிடம்
எண்ணின்றி முக்கோடி வாணாள துடையானைப்
புண்ணொன்றப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 8

8. பண்கள் பொருந்துமாறு இனிய இசை பாடுகின்ற அடியார்களுக்கு இருப்பிடமாக நிலவுலகமல்லாது விண்ணுலகத்தைக் கொடுக்கின்ற நீலகண்டப்பெருமான் பொருந்தி

யுறையுமிடம், கணக்கில்லாதபடி மூன்றுகோடி வாழ்நாள் உடையவனுகிய இராவணனை உடல் புண்படும்படி தாக்கி, அவனது வலிமையை அழித்தவனுகிய சடாயு வழிபட்ட திருப் புள்ளிருக்குவேளூர் ஆகும்.

சந்திரகாசம் என்ற வாளையளித்தபோது மூன்றுகோடி வாழ்நாளும் இறைவனுர் இராவணனுக்கு அளித்தருளினுர் என்பது வரலாறு.

வேதித்தார் புரமூன்றும் வெங்கணையால் வெந்தவியச்
சாதித்த வில்லாளி கண்ணுளன் சாருமிடம்
ஆதித்தன் மகனென்ன அகன்ஞாலத் தவரோடும்
போதித்த சடாயென்பான் புள்ளிருக்கு வேளூரே. 9

9. பகைவர்களது முப்புரங்களையும் கொடிய தீக்கணை யால் வெந்து அழியும்படியாகச் செய்த வெற்றி பெற்ற மேரு என்ற வில்லையுடையவனுகிய கண்ணுளனும் சிவபிரான் தங்கி யுள்ள இடம், தான் சூரியனது குமாரன் என்று இந்த அகன்ற உலகத்தில் உள்ளவர்களுக்கு (இராவணனைத் தாக்கியழித்த ஆற்றலால்) அறிவுறுத்திய சடாயு வழிபட்ட திருப்புள்ளிருக்கு வேளூர் ஆகும்.

சாதித்தல் – செய்தற்கரிய செயலைச் செய்து முடித்ததைக் குறித்தது.

கண்ணுளன் — தோழன், நாயகன். உலகுக்குக் கண்ணு யிருந்து ஆட்கொள்பவன் என்றும் கொள்ளலாம்.

ஆதித்தன்—சூரியன். சடாயு, சம்பாதி என்ற இருவரும் சூரியனது மக்கள் என்றும், இவர்கள் சூரியமண்டலம் வரை பறந்து சென்று சிறகுகள் கரிந்து இத்தலத்தில் வீழ்ந்து வழி பட்டுச் சிறகும் வரமும் பெற்றனர் என்றும் உள்ள புராண வரலாறு இப்பாடலாற் குறிப்பால் உணர்த்தப்பட்டதாகக் கொள்க.

ஞாலத்தவரோடு — 'ஞாலத்தவர்க்கு' என்ற நான்காம் வேற்றுமைப் பொருளில் வந்தது. தான் ஆதித்தன் மகன் என்பதைத் தன் ஆற்றலால் உலகத்தவர்க்குப் போதித்தான் (அறிவுறுத்தினன்) என்பதாம்.

கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன் றுடாமே
தடுத்தவரெம் பெருமானுர் தாமினிதா யுறையுமிடம்
விடைத்துவரும் இலங்கைக்கோன் மலங்கச்சென்றி
ராமற்காப்
புடைத்தவனைப் பொருதழித்தான் புள்ளிருக்கு வேளூரே. 10

10. மிகவும் வேகத்துடன் விண்ணினின்றும் இறங்கிய கங்கையை அதன் வேகத்தைத் தடுத்து, தன் பரந்த சடையின் மேல் (அந்த சடை) ஒரு சிறிதும் முழுகாது வைத்தவனுகிய எம்பெருமான் மகிழ்வுடன் உறையுமிடம், பெருங்கோபத்துடன் சீறிவந்த இராவணனை இராமன்பொருட்டாகப் போர் மீது சென்று கலங்கச் செய்து நன்ருகப் புடைத்துத் தாக்கி அவன் வலிமையை அழித்தவனுகிய சடாயு வழிபட்ட திருப் புள்ளிருக்குவேளூர் ஆகும்.

கடுத்து வருதல்—வேகத்துடன் பாய்ந்து வருதல்.

கமழ்சடை—பரந்த சடை அல்லது மணம் விசும் சடை. மணம் வீசுதல் சடையில் உள்ள மலர்களால் என்க.

ஆடுதல்—முழுகுதல். விடைத்து—பெருங்கோபத்துடன் வந்ததைக் குறித்தது.

செடியாய உடல்தீர்ப்பான் தீவினைக்கோர் மருந்தாவான்
பொடியாடிக் கடிமைசெய்த புள்ளிருக்கு வேளூரைக்
கடியார்ந்த பொழிற்காழிக் கவுணியன்சம் பந்தன்சொல்
மடியாது சொல்லவல்லார்க் கில்லையாம் மறுபிறப்பே. 11

திருச்சிற்றம்பலம்

11. எத்தகைய குணமுமில்லாததான பிறவி இல்லாமல் அருள்செய்பவனும், அப்பிறவிக்குக் காரணமான தீவினைக்கு ஒருமருந்து ஆவானுமாகிய திருநீற்றில் அபிடேகம் கொள்ளும் சிவபிரானுக்குச் சடாயு, சம்பாதி என்ற இவர்கள் இருவரும் அடிமை செய்து வழிபட்ட திருப்புள்ளிருக்குவேளூர் என்ற இத் தலத்தைப் போற்றி, மணம் மிகுந்த பொழில்களையுடைய சீகாழியில் கவுணியர் குலத்து உதித்த திருஞானசம்பந்தன் பாடிய இந்தச் சொன்மாலையைச் சிறிதும் சோம்பலின்றி ஓத வல்லவர்களுக்கு மறுபிறப்பு இல்லையாம். (பிறப்பு இறப் பில்லாப் பேரின்பம் அடைவர்.)

செடியாய உடல் தீர்ப்பான், தீவினைக்கோர் மருந்தாவான் புள்ளிருக்குவேளூரைப் பொடியாடிக்கடிமை செய்த கடியார்ந்த பொழில்காழிக் கவுணியன் சம்பந்தன் சொல்மடியாது சொல்ல வல்லார்க்கு மறுபிறப்பு இல்லையாம் என்று கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளலும் பொருந்துவதே.

செடி—குணமின்மை, அற்பம், பாவம் என்ற பொருள்கள், எனவே செடியாய உடல் என்பதற்குப் பாவத்துக்குக் காரண மான பிறப்பு என்றும் .கொள்ளலாம்.

தீவினைக்கோர் மருந்து—பிறவிக்குக் காரணம் தீவினையே யாகையால் அதற்கு மருந்தாவான் என்று இறைவனைக் கூறினர். "மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த்தருளவல்லான்..." என அப்பரடிகளும் இத்தலத்துத் தாம்பாடிய திருத்தாண்டகத்தில் கூறியுள்ளார். (6ம் திரு முறை, 54ம் பதிகம், 8ம் பாடல் ) பவரோகஸ்ய பேஷஜம்— பிறவிப்பிணிக்கு மருந்து என்பதும் பவரோக வைத்தியநாதன் என்பதும் வடமொழி வழக்குகளாம் (பவரோகம் - பிறவிப் பிணி). "தீராத வினையெல்லாம் தீர்த்தருளும் தம்பிரான்" என்று போற்றப்பெறும் இப்பெருமானே அகில உலகத்துக்கும் பிணிதீர்க்கும் ஸர்வலோக வைத்தியநாதனுவார். பிறவிப் பிணியையே தீர்த்தருளும் இப்பெருமானுக்கு எளியதான

உடற்பிணிகளைத் தீர்த்தருளல் ஒரு அரிய செயலாமோ? எனவே நோய் நீங்கும் பொருட்டு இந்நாளிலும் மக்கள் பெருந்திரளாய் வந்து வைத்தியநாதப்பெருமானையும், தையல் நாயகிப்பிராட்டியாரையும், செல்வமுத்துக்குமாரசுவாமியை யும் வழிபட்டுப் பேறு பெறுதலைக் கண்கூடாகக் காணலாம்.

மடியாது — சோம்பல் இன்றி; அல்லது உலகில் 'வாளா பிறந்திறவாது' என்றும் கொள்ளலாம்.

இத்திருப்பதிகம் நாள்தோறும் ஓதுதற்குரியதாம். இத் திருப்பதிகத்தின் 8, 9, 10ம் பாடல்களில் வழக்கமாகக் கூறும் இராவணனை வலியழித்துப்பின் அருளியது, பிரமவிட்டு ணுக்கள் திருமுடி அடிகாண இயலாது நின்றது, புறச்சமய நிராகரணம் என்ற இவை இல்லாமலிருப்பது இதன் தனிச் சிறப்பை உணர்த்துகிறது. இம்மாதிரி சில பதிகங்கள் இன்னும் உள. அவை வந்துழிக் காண்க.

சுவாமி—வைத்தியநாதர்] [தேவி—தையல்நாயகி

சிவம்

---

## மருந்தைப் பார்த்தால் சுத்தமண்

மண்டலத்தில் நாளும் வயித்தியராய்த் தாமிருந்தும்
கண்டவினை தீர்க்கின்றார் கண்டீரோ—தொண்டர்
விருந்தைப்பார்த் துண்டருளும் வேளூர்என் நாதர்
மருந்தைப்பார்த் தால்சுத்த மண்.

(வைத்தீசுவரன் கோயில் மருந்து என்னும் மண்ணுருண் டையின் பெருமையைப் புகழ்ந்து கவி காளமேகப் புலவர் பாடியது).

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருநின்றியூர்

பதிக வரலாறு: — திருப்புள்ளிருக்குவேளூரில் வைத்திய நாதப்பெருமானை வணங்கித்துதித்த பின்னர், திருஞானசம் பந்தர் திருநின்றியூருக்கு எழுந்தருளி, அங்குக்கோயில் கொண்ட சிவபெருமானை ஆராக்காதலோடு வணங்கித் திரு நின்றியூர் கோயில் கொண்ட நிமலரையல்லது எனது உள்ளம் வேறு ஒன்றினையும் உணராது எனப்பாடிய அருமைத் திருப் பதிகம் இதுவாகும்.

பண்-நட்டபாடை] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

சூலம்படை சுண்ணப்பொடி சாந்தஞ் சுடுநீறு
பாலம்மதி பவளச்சடை முடிமேலது பண்டைக்
காலன்வலி காலின்னொடு போக்கிக் கடிகமழும்
நீலம்மலர்ப் பொய்கைநின்றி யூரின்னிலை யோர்க்கே. 1

பதிகப்பொழிப்புரை: 1. முன்னொரு காலத்தில் காலனது வலிமையைத் தன் காலினால் போக்கியவரும், மணம் வீசும் நீலமலர்கள் நிறைந்த பொய்கைகளையுடைய திருநின்றியூரில் நிலையாக எழுந்தருளியிருப்பவருமாகிய சிவபிரானுக்குப் படை சூலமாகும். வாசனைப்பொடியும் சந்தனமும் திருநீறே யாம். பவளம் போன்ற செஞ்சடை மீது உள்ளது பால் போன்ற அழகிய (வெண்மை நிறமுள்ள) சந்திரனாகும்.

சுண்ணப்பொடி — வாசனைப்பொடி. சாந்தம் — கலவைச் சந்தனம். சுடுநீறு — திருநீறு. சுட்டு எரித்து நீருக்கப்பட்ட மையின் சுடுநீறு என்றார். பாலம்மதி — பால் அம்மதி - பால் போலும் அழகிய சந்திரன். நிலையோர் — நிலை பெறுதலை உடையவர், சிவபிரான்.

அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மிலர் அடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றி யூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந் தாளும்
பச்சம்முடை யடிகள்திருப் பாதம்பணி வாரே. 2

2. நஞ்சினைக் கழுத்தில் உடையவரும், மணம் நிறைந்த கொன்றைப் பூமாலையை விரும்பி அதனை அன்போடு சாத்தும் அடியவர்களை ஆட்கொள்ளும் பெருங்கருணையுடைய கடவுளாகிய திருநின்றியூரில் கோயில் கொண்ட சிவபிரானுடைய திருவடிகளைப் பணிகின்றவர்களாகிய அடியவர்கள் அச்சம், பாவம் கேடு, நாடோறும் வந்து பொருந்தும் துன்பங்கள் ஆகிய இவை ஒன்றும் இல்லாதவர்களாக ஆவார்கள்.

அச்சம் இலர் — 'அஞ்சுவது யாதொன்றுமில்லை அஞ்ச வருவதும் இல்லை' என்ற அப்பரடிகளின் வாக்கையும் இங்குக் கொள்க. சிவபிரானாகிய பெருந்துணையைப் பெற்றுவிட்டமை யால் அடியவர்கள் அச்சம் இலர் என்பதாம்.

பாவம்மிலர் — அடியவர்கள் யானிது செய்தேன் என்று தருக்கின்றியே எல்லாச்செயல்களையும் செய்தலால் மேல் வினைக்குக் காரணமாகும் பாவம்மிலராவர் என்பதாம்.

கேடு - அழிவு, குறைவு, கெடுதல், சிதைவு, பொல்லாங்கு முதலிய பொருள்கள். இவற்றில் எதுவும் அடியவர்களைச் சாராது என்பதாம்.

நிச்சம் - நித்தம், தினந்தோறும். நோய் - துன்பம். நச்சம் விஷம். நஞ்சு என்பது எதுகை நோக்கி நச்சு என்றாகி 'அம்' சாரியை பெற்று நச்சம் என வந்தது, மிடறு — கழுத்து.

பச்சம் — பக்ஷம் என்ற வடசொல்லின் திரிபு. உருக்கம் என்பது பொருள். எனவே பெருங்கருணை என்று பொருள் கொள்ளப்பட்டது.

பறையின்னொலி சங்கின்னொலி பாங்கா ரவுமார
அறையும்மொலி யெங்கும்மவை யறிவா ரவர்தன்மை
நிறையும்புனல் சடைமேலுடை யடிகள்நின்றி யூரில்
உறையும்மிறை யல்லதென துள்ளம் முணராதே. 3

3. பறை, சங்கு இவற்றின் ஒலியோடு, மற்றும் எல்லாப் பக்கங்களிலும் மிகுதியாக அடித்தலால் உண்டான ஏனைய கருவிகளின் ஒலிகளான இவற்றை எங்கும் எவரும் அறிவார்கள். ஆனால் எனது உள்ளம் சடைமுடியின்மீது நிறைந்த புனலாகிய கங்கையை உடைய கடவுளும், திருநின்றியூரில் உறையும் இறைவருமாகிய சிவபிரானரது தன்மையையல்லாது வேறு ஒன்றை உணராது.

திருக்கோயில்களில் பூசை நேரங்களில், பறை, சங்கு, மற்றும் தோற்கருவிகள் இவைகளின் ஒலி மிகுதியாக ஒலிக்கும் காலத்தும் தமது உள்ளம் அவ்வொலிகளால் ஈர்க்கப்படாது இறைவரது திருவடித்தியானத்திலேயே நிலைத்து நிற்கும் என்று இப்பாடலிற் குறிப்பிட்டருளியதாகக் கொள்க.

பூண்டவ்வரை மார்பிற்புரி நூலன்விரி கொன்றை
ஈண்டவ்வத னோடும்மொரு பாலம்மதி யதனைத்
தீண்டும்பொழில் சூழ்ந்ததிரு நின்றியது தன்னில்
ஆண்டகழல் தொழிலல்லது அறியாரவ ரறிவே. 4

4. அணிகலன்களைப் பூண்ட மலைபோன்ற மார்பில் பூணூல் அணிந்தவனும், அதனோடு நன்கு மலர்ந்த கொன்றை மாலையும் நெருங்க வைத்தவனும், ஒப்பற்ற பால் போன்ற அழகிய சந்திரனைத் தீண்டுகின்ற பொழில்கள் சூழ்ந்த திருநின்றியூரில் எழுந்தருளிய சிவபிரானது, அடியார்களை ஆட்கொண்டருளிய சிறப்பு மிக்க, திருவடிகளைத் தொழுதாலல்லது ஆன்மாக்கள் தமது அறிவால் இறைவனை அறியமாட்டார் என்பதாம்.

ஆண்டகழல் தொழில் அல்லது அவர் அறிவே(கொண்டு) அறியார் என்பது ஆன்மாக்கள் அருளே கண்ணாகக் கொண்டு காணலாமேயன்றி அறிவால் காண இயலாது என்பதாம்.

தொழில் அல்லது—தொழுதால் அல்லது.

அப்பரடிகளின் வினாவிடைத் திருத்தாண்டகம் 10-ம் திருப்பாடல் இங்கு ஒப்பு நோக்குதற்குரியது.

"மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி
மயானத்தான் வார்சடையான் என்னி னல்லான்
ஒப்புடைய னல்லன் ஒருவ னல்லன்
ஓரூர னல்லன் ஒருவம னில்லி
அப்படியும் அந்நிறமும் அவ்வண் ணமும்
அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்
இப்படியன் இந்நிறத்தன் இவ்வண் ணத்தன்
இவனிறைவன் என்றெழுதிக் காட்டொணாதே.

(6ம் திருமுறை, 97ம் பதிகம், 10ம் பாடல்)

அவரவரும் தாம்தாம் பெருமானின் திருவருளையே கண்ணாகப் பெற்றுக் காணின் இறைவனுடைய உண்மையான தன்மையைக் காணலாமேயல்லாது மற்றைய பொருள்களை அறிவது போலத் தம் அறிவினாற் காண இயலாது என்பது மேற்படி பாடலில் அறிவுறுத்தப்படும் உண்மையாகும்.

குழலின்னிசை வண்டின்னிசை கண்டுகுயில் கூவும்
நிழலின்னெழில் தாழ்ந்தபொழில் சூழ்ந்தநின்றி யூரில்
அழலின்வல னங்கையது ஏந்தியன லாடும்
கழலின்னொலி யாடும்புரி கடவுள்களை கண்ணே. 5

5. குழலின் இசையையும் வண்டின் இசையையும் கேட்டுக் குயில் கூவுகின்றதும், நிழலின் அழகு தங்கியதுமான பொழில்கள் சூழ்ந்த திருநின்றியூரில், வலஞ்சுழித்து எரியும்

அனலை அழகிய கையில் ஏந்தியும், வீரக்கழல்கள் ஒலிக்கவும் ஆடும் விரும்பத்தக்க கடவுளாகிய சிவபிரானே நமக்குப் பற்றுக்கோடு ஆவார்.

சோலைகளில் நிழலும், இடையிடையே சூரிய ஒளியும் விரவித் தோன்றும் நிலை ஒரு அழகிய சித்திரத் திரைச்சீலை விரித்தது போன்று காட்சியளித்தலின் நிழலின் எழில் தாழ்ந்த பொழில் என்றார்.

மூரன்முறு வல்வெண்ணகை யுடையாளொரு பாகம்
சாரன்மதி யதனோடுடன் சலவஞ்சடை வைத்த
வீரன்மலி யழகார்பொழில் மிடையுந்திரு நின்றி
ஊரன்கழ லல்லாதென துள்ளம் முணராதே. 6

6. சிறிதே அரும்பிய புன்சிரிப்பும் வெண்மையான பற்களையும் உடைய உமாதேவியார் ஒருபாகமாக இருக்கவும், சடையின்மேல் பிறைச் சந்திரனோடு கங்கையையும் வைத்த வீரனும், மிகுந்த அழகுடைய பொழில்கள் நெருங்கிய திரு நின்றியூரில் எழுந்தருளியவருமான சிவபிரானது திருவடிகளைத் தவிர எனது உள்ளம் வேறு ஒன்றையும் உணராது.

பற்றியொரு தலைகையினில் ஏந்திப்பலி தேரும்
பெற்றியது வாகித்திரி தேவர்பெரு மானார்
சுற்றியொரு வேங்கையத ளோடும்பிறை சூடும்
நெற்றியொரு கண்ணார்நின்றி யூரின்னிலை யாரே. 7-8

7-8. கையினில் ஒரு தலையினைப்பற்றிஏந்திப்பிச்சை யெடுத்தலாகிற ஒரு தன்மையுடனாகித் திரிகின்ற தேவர்தேவனாகிய சிவபிரான், தனது இடையைச் சுற்றியதொரு புலியின் தோலோடு, பிறைச்சந்திரனைச் சூடியும், நெற்றியிலே ஒரு கண்ணை உடையவராகியும் திருநின்றியூரில் நிலையாக எழுந் தருளியிருப்பவர் ஆவர்.

தாருகவனத்து இருடியர்களை நல்வழிப்படுத்துவதற்காகவே இறைவர் இரவலராகக் கோலங்கொண்டனரேயன்றி,

இரத்தல் அவர்க்கியல்பு அன்று என்பதை விளக்க "பலி தேரும் பெற்றியதுவாகி" என்று அருளிச்செய்தார். பெற்றி – தன்மை.

நல்லம்மலர் மேலானொடு ஞாலம்மது உண்டான்
அல்லரென ஆவரென நின்றும்மறி வரிய
நெல்லின்பொழில் சூழ்ந்தநின்றி யூரின்னிலை யாரெம்
செல்வரடி யல்லாதென சிந்தையுண ராதே. 9

9. அழகிய மலராகிய தாமரையை இருப்பிடமாகக் கொண்ட பிரமதேவனோடு, இவ்வுலகத்தை உண்டவனான திருமாலும் தமக்குள் அல்லர் எனவும் ஆவர் எனவும் தருக்கிநின்று தேடியும் அறிதற்கு அரியவரானவரும், நெல்வயல்கள் சூழ்ந்த திருநின்றியூரில் நிலைபெற்று உள்ளவரும் எமது செல்வருமாகிய சிவபிரானது திருவடிகளைத்தவிர வேறு ஒன்றையும் எனது சிந்தை உணராது.

'அல்லர் என ஆவர் என' என்பது இன்னர் என்று அறியப் படாது நின்ற இவ்வழல் தூண் உருவினர் பகைவரோ அல்லது நண்பரோ என்ற ஐயம். அல்லது தலைவர் அல்லர் எனவும் தலைவர் ஆவர் எனவும் தமக்குத்தாமே தருக்கி நின்ற நிலையைக் குறித்ததாகவும் கொள்ளலாம்.

நெறியில்வரு பேராவகை நினையாநினை வொன்றை
அறிவில்சம ணாதருரை கேட்டும்மய ராதே
நெறியில்லவர் குறிகள்நினை யாதேநின்றி யூரில்
மறியேந்திய கையானடி வாழ்த்தும்மது வாழ்த்தே. 10

10. தொன்றுதொட்டு ஒரு நெறியில் வருவதும் மாறு படாததும் மறத்தலாகாததுமான சிவ நெறியில் வைத்த ஒரு நினைவினை அறியும் அறிவு இல்லாத சமணர்களாகிய கீழ் மக்களது வார்த்தைகளைக் கேட்டு மயங்காமலும், தமக்கென்று ஒரு உண்மையான நெறியில்லாத அப்புறச் சமயிகளின் குறிகளை நினையாமலும், திருநின்றியூரில் எழுந்தருளியுள்ள

மானேந்து கரத்தினனான சிவபெருமானது திருவடிகளை வாழ்த்துவதே உண்மையான வாழ்த்தாகும்.

சிவநெறியானது தொன்று தொட்டு ஒரு நெறிமுறையாக வருவது. புறச்சமயமோ இடையிலே தோன்றி ஒரு உண்மையான நெறியில்லாதது. பிறவியிலே தள்ளுவது. எனவே சிவநெறி நினைவினை மறவாமலும், புறநெறியாகிய அவநெறிக் குறிகளை நினையாமலும், மானேந்து கையினனான சிவபிரானது திருவடிகளை வாழ்த்தும் அதுவே வாழ்த்தாகும் என்று இப் பாடலின் கருத்தை உணர்ந்து கொள்க.

குன்றம்மது எடுத்தானுடல் தோளுந்நெரி வாக
நின்றங்கொரு விரலாலுற வைத்தான்நின்றி யூரை
நன்றார்தரு புகலித்தமிழ் ஞானம்மிகு பந்தன்
குன்றாத்தமிழ் சொல்லக்குறை வின்றிநிறை புகழே 11

திருச்சிற்றம்பலம்

11. திருக்கயிலை மலையை எடுத்தவனாகிய இராவணனது உடலும் தோள்களும் நெரியும்படியாக ஒரு கால் விரலால் ஊன்றியவனாகிய சிவபிரானின் திருநின்றியூரை நன்மைகள் நிறைந்த திருப்புகலியில் அவதரித்த தமிழ் ஞானசம்பந்தன் பாடிய எஞ்ஞான்றும் திருவருள் குறையாத தமிழ்ப்பாடல்களைச் சொல்ல (அம்மாதிரி சொல்பவர்களுக்கு) ஒரு குறைவுமில்லாமல் நிறைந்த புகழ் ஏற்படும்.

ஞானம்மிகுபந்தன்-திருஞானசம்பந்தன். சிவஞானத்தோடு மிகுந்த பந்தம் உடையவன் என்பதாம்.

குன்றாத்தமிழ் - பாடிய காலத்தேமட்டுமல்லாது இன்றும் என்றும் பயனைத் தரவல்லது என்ற குறிப்பு.

சொல்லுதல் — இங்குப் பக்தியுடன் ஓதுதலைக் குறித்தது.

சுவாமி—மஹாலக்ஷ்மீச்வரர்] [தேவி—உலகநாயகி

சிவம்.

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருப்புன்கூர்

பதிக வரலாறு: — திருநின்றியூரில் நிமலர் கழல் ஏத்திக் கூடிய காதலிற் கும்பிட்டு வண்டமிழ்மாலே பாடியபின், திருஞானசம்பந்தப் பிள்ளேயார் திருநீடூர் சென்று வணங்கி, அங்கிருந்து புறப்பட்டுத் திருப்புன்கூர் அடைந்து அங்கு திருவருட் கூத்தியற்றும் திருவடிகளே வணங்கிப் பாடிய அருந்தமிழ்ப் பதிகம் இது. (திருநீடூர் பதிகம் கிடைத்திலது).

பண்-தக்கராகம்] திருச்சிற்றம்பலம் [1-ம் திருமுறை

முந்தி நின்ற வினேக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனுர் திருப்புன்கூர்
அந்த மில்லா அடிக ளவர்போலும்
கந்த மல்கு கமழ்புன் சடையாரே. 1

பதிகப்பொழிப்புரை: 1. பழைமையான வினேகளானவை போக, நெஞ்சமே! நீ திருப்புன்கூரில் கோயில் கொண்டுள்ள சிவபிரானுரைச் சிந்திப்பாயாக. மிகுந்த மணம் வீசும் அழகிய பொன்போலும் சடையுடையவராகிய அவர் எல்லேயற்ற புகழ் உடைய கடவுளாவர்.

பழைமையான வினே—இது சஞ்சிதம் எனப்படும். இதுவே பிறப்பிற்குக் காரணமாவது. இது நீங்கத் திருப்புன்கூர் எழுந்தருளிய சிவபெருமானேத் தியானிப்பாய் என்று தன் நெஞ்சுக்கு அறிவுறுத்தும் முறையில் உலகுக்கு உபதேசித்தருளினுர் எனக்கொள்க.

சிந்தித்தல்—தியானித்தல்: போலும்—அசைச்சொல்.

மூவ ராய முதல்வர் முறையாலே
தேவ ரெல்லாம் வணங்குந் திருப்புன்கூர்

ஆவ ரென்று மடிக ளவர்போலும்
ஏவி னல்லார் எயின் மூன்றெரித்தாரே. 2

2. பிரமன், திருமால், உருத்திரன் என்னும் மூவரையும் அதிட்டித்து நிற்பவராயும் அவர்க்கு முதல்வராயும் உள்ள முறைமையினுல் எல்லாத் தேவர்களும் வணங்கும் திருப்புன் கூரில் எழுந்தருளியுள்ள கடவுளாகிய அவரே ஒரு அம்பினுல் பகைவர்களது மும்மதில்களேயும் எரித்தவராவர்.

மூவராய முதல்வர் - இதனைத் திருவெழுகூற்றிருக்கையில் ''படைத்தளித்தழிப்ப மும்மூர்த்திகளாயினே'' என்றருளிச் செய்துள்ளதன் விளக்கம் நம் மூவர் தமிழ் மாலே-19, பக்கம் 57, 62ல் காண்க. திருச்சிவபுரம் என்னும் தலத்தில் பாடி அருளிய பதிகங்களில் நட்டபாடை என்ற பண்ணில் அமைந்த திருப்பதிகத்திலும் இதனைப் பிள்ளேயார் கூறியுள்ளார். அப் பதிகம் உரிய காலத்தில் பிரசுரிக்கப்படும்.

ஏ—அம்பு. அல்லார்—பகைவர். எயில்—மதில்.

பங்க யங்கள் மலரும் பழனத்துச்
செங்க யல்கள் திளேக்குந் திருப்புன்கூர்க்
கங்கை தங்கு சடையா ரவர்போலும்
எங்க ளுச்சி உறையும் மிறையாரே. 3

3. தாமரைப் பூக்கள் மலர்கின்ற வயல்களில் செழுமை யான கயல்மீன்கள் திளேக்கின்ற திருப்புன்கூரில் கோயில் கொண்டுள்ள கங்கை தங்கு சடையாராகிய அவரே எங்கள் முடிமீது உறையும் இறைவர் ஆவர்.

பழனம்—வயல். முதல் இரண்டு அடிகளால் திருப்புன் கூரின் நீர்வளம் கூறப்பட்டது.

கங்கை தங்கு சடையார்—கங்காதரராகிய சிவபெருமான். உச்சி—தலேயுச்சி.

கரையு லாவு கதிர்மா மணிமுத்தம்
திரையு லாவு வயல்சூழ் திருப்புன்கூர்
உரையி னல்ல பெருமா னவர்போலும்
விரையி னல்ல மலர்ச்சே வடியாரே. 4

4. ஒளிவிடும் அழகிய மணிகள் கரையிலே உலாவுதலையும், முத்துக்கள் அலைகளிலே உலாவுதலையும் உடைய வயல்கள் சூழ்ந்த திருப்புன்கூரில் கோயில் கொண்ட புகழ்மிக்க சிவபெருமானாகிய அவர் நன்மணம் பொருந்திய மலர்போன்ற சிவந்த திருவடிகளையுடையவராவர். (அவற்றை வணங்குவோமாக)

பவள வண்ணப் பரிசார் திருமேனி
திகழும் வண்ண முறையுந் திருப்புன்கூர்
அழக ரென்னு மடிக ளவர்போலும்
புகழ நின்ற புரிபுன் சடையாரே. 5

5. பவள நிறத்தின் தன்மை பொருந்திய திருமேனி மிக்க விளக்கத்துடன் திகழும் வண்ணம் திருப்புன்கூர் என்ற இத்தலத்தை என்றும் நீங்காது உறையும் அழகராகிய சிவபெருமானே அனைவராலும் புகழும்படி நிலைபெற்ற அழகிய பொற்சடையினையுடைய பெருமானவர்.

தெரிந்தி லங்கு கழுநீர் வயற்செந்நெல்
திருந்த நின்ற வயல்சூழ் திருப்புன்கூர்ப்
பொருந்தி நின்ற வடிக ளவர்போலும்
விரிந்தி லங்கு சடைவெண் பிறையாரே. 6

6. மிக்க ஒளியுடன் விளங்கும் கழுநீர்ப் பூக்கள் நிறைந்த வயல்களும், செந்நெல் பயிர்கள் திருத்தமாக அமைந்த வயல்களும் சூழ்ந்த திருப்புன்கூரில் பொருந்தி நின்ற அடிகளாகிய அவரே விரிந்து இலங்கும் சடையில் வெண்மையான பிறைச் சந்திரனைத் தரித்த சிவபெருமானவர்.

தெரிந்து இலங்குதல்—மிக்க விளக்கத்துடன் கூடுதல். கழுநீர்—ஆம்பல் மலர்.

பாரும் விண்ணும் பரவித் தொழுதேத்தும்
தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்
ஆர நின்ற வடிக ளவர்போலும்
கூர நின்ற எயின்மூன் றெரித்தாரே. 7

7. தேர்த்திருவிழா திகழும் வீதிகளையுடைய திருப்புன்கூரில் பொருந்த எழுந்தருளியுள்ள சிவபெருமானே நிலவுலகத்து மக்களும், விண்ணுலகத் தேவரும் தொழுது வணங்கும் கடவுளாவர். அவரே மிக்க வலிமையுடன் நின்ற மூன்று மதில்களையும் எரித்தவராவர்.

பார், விண் என்பன ஆகுபெயராய் அவற்றில் வசிக்கும் மக்களையும் தேவரையும் குறித்தன.

மலைய தனு ருடைய மதின்மூன்றும்
சிலைய தனு லெரித்தார் திருப்புன்கூர்த்
தலைவர் வல்ல வரக்கன் தருக்கினை
மலைய தனு லடர்த்து மகிழ்ந்தாரே. 8

8. மலை போன்ற திண்மையுடைய அசுரர்களது மூன்று மதில்களையும் மேருமலையாகிய வில்லினுல் (அம்பெய்து) எரித்தவராகிய திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள முதல்வராகிய சிவபிரானே, வலிமை மிக்க இராவணனது வலிமையைத் திருக்கயிலை மலையை ஒரு விரலால் ஊன்றி நெருக்கி, (அவன் சாமகானம் பாடியபின்) மகிழ்ந்த பெருமானுவர்.

மலையதனுர் — மலையது அன்னுர். மலை போன்றவர்கள். இப்பாடலால் இறைவரது வீரம், கருணை இரண்டும் போற்றப்பெற்றது. அடர்த்தல் - நெருக்குதல்.

நாட வல்ல மலரான் மாலுமாய்த்
தேட நின்ரு ருறையுந் திருப்புன்கூர்
ஆட வல்ல அடிக ளவர்போலும்
பாட லாடல் பயிலும் பரமரே. 9

9. தேடுதற்கு வல்லவனாகிய பிரமதேவனும் திருமாலு மாய் முறையே திருமுடியும், திருவடியும் தேடுமாறு அனற் பிழம்பாய் நின்றவரும் திருப்புன்கூரில் உறைபவரும், ஆடல் வல்லானுமாகிய அவரே பாடலும் ஆடலும் பயின்ற முழுமுதற் கடவுளாவர்.

நாடவல்ல—பிரமதேவனுக்கு நான்கு முகங்கள் உண்மை யால் நான்கு திசைகளிலும் ஒரே காலத்தில் தேட இயலும் ஆகையால் அவனை நாட வல்லான் எனக்கூறினார். அங்ஙன மிருந்தும் காண இயலாதவனாயினான் என்பது குறிப்பு.

ஆடவல்லான் — நடராசப் பெருமான்.

பாடல் ஆடல் பயிலுதல் — பாடல் என்பது வேத ஆகமங் களையும், ஆடல் என்பது ஐந்தொழில் கூத்தினையும் குறிக்கும்.

குண்டு முற்றிக் கூறை யின்றியே
பிண்ட முண்ணும் பிராந்தர் சொற்கேளேல்
வண்டு பாட மலரார் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபாலி வேடமே. 10

10. பருத்த உடலுடன் ஆடையுமின்றிச் சோற்றினை உருண்டைகளாக்கி உண்பவரும் மயக்க அறிவினருமாகிய சமணர்களது சொற்களைக் கேட்காதீர்கள். வண்டுகள் பாட மலர்கள் நிறைந்த திருப்புன்கூரில் எழுந்தருளிய கபாலியாகிய சிவபிரானது திருக்கோலத்தையே தரிசித்துத் தொழுவீர் களாக. (உலகத்தவரை முன்னிலைப்படுத்திக் கூறியதாம்.)

குண்டு — உடல் பருமன். கூறை — ஆடை. பிண்டம்— சோற்று உருண்டை. பிராந்தர் — மயக்க அறிவினர்.

கபாலிவேடம் — பிரம கபாலத்தைக் கையில் தரித்த திருக் கோலம்.

மாட மல்கு மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வர் உறையுந் திருப்புன்கூர்

நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே. 11

திருச்சிற்றம்பலம்

11. திருப்புள்கூர் உறையும் சேடரும் செல்வருமாகிய சிவபிரானை நாடவல்லவனாகிய, மாடங்கள் மிக்கு உள்ளதும் மதில்கள் சூழ்ந்ததுமான சீகாழித் தலைவனான, திருஞான சம்பந்தனது இந்தப் பத்துப் பாடல்களாலும் (அப்பெருமானை) துதித்து நல்வாழ்வு பெறுவீர்களாக. இப்பதிகத்தை ஓதினால் நல்வாழ்வு பெறலாம் என்று பதிகப்பயன் உரைத்தருளினார்.

சேடர் — அறிவிற் சிறந்தவர். 'ஸர்வக்ஞர்' அல்லது முற்றறிவுடையவர். செல்வர் — 'ஸர்வைச்வர்ய ஸம்பன்னர்' ஸகலமான செல்வங்களும் இறைவரது திருவடிகளிலேயே உற்பத்தியாகின்றது.

சுவாமி—சிவலோகநாதர்] [தேவி—சொக்கநாயகி

சிவம்

---

## மெய்சொல்லா இராவணன் பொய் சொல்லா சடாயு

திருப்புள்ளிருக்குவேளூர் பதிகம் இரண்டாவது பாடலில் குறிப்பிட்ட மெய் சொல்லா இராவணன் பொய் சொல்லா சடாயு என்பன இராமன் கதையுள் இராவணனும் சடாயுவும் எதிர்ந்த போது அவரவர் தம்தம் உயிர் தங்கும் பிராணநிலைகளை முறையே பொய்யாகவும், மெய்யாகவும் தெரிவித்துக்கொண்டு அதனால் சடாயு உயிரிழக்க நேர்ந்த வதத்தின் வரலாறு குறித்தன என்பது சிவக்கவிமணி திரு C.K. சுப்பிரமணிய முதலியாரவர்கள் உரைக்குறிப்பு. ஆயின் இவ்வரலாறு எப்புராணத்தில் உள்ளதென அவர் குறிப்பிடவில்லை. நாமறிந்த வரையில் இச்செய்தி கம்பராமாயணத்திலோ அல்லது வால்மீகி இராமாயணத்திலோ கூறப்படவில்லை. தலபுராணத்தில் உள்ளதாக இருக்கக்கூடும்.

உ

சிவமயம்

ஸ்ரீமஹாதேவஜயம்

# திருஅன்னியூர்

## (பொன்னூர்)

பதிக வரலாறு:-திருப்புன்கூர்ச்சிவலோக நாதனை வணங்கி வண்டமிழ் மாலை பாடித்துதித்த பின்னர், பிள்ளையார் திருப்பழமண்ணிப்படிக்கரை, திருக்குறுக்கை முதலிய பதிகளில் இறைவரைக் கும்பிட்டுப்பின் திருஅன்னியூர் அடைந்து அங்கு எழுந்தருளியுள்ள 'ஆபத்ஸஹாயநாதனை' அடிபோற்றி அருளிச்செய்த அருந்தமிழ்ப் பதிகம் இது. [திருப்பழமண்ணிப்படிக்கரை, திருக்குறுக்கை இவைகளுக்குப் பிள்ளையார் பதிகங்கள் கிடைக்கவில்லை].

பண்-குறிஞ்சி] திருவிருக்குக்குறள் [1-ம் திருமுறை

மன்னி யூரிறை, சென்னி யார்பிறை
அன்னி யூரமர், மன்னு சோதியே. 1

பதிகப்பொழிப்புரை: 1. உயிருக்கு உயிராய் நிலைபெற்று உயிர்களை நடத்தும் தலைவர் திருஅன்னியூரில் விருப்பத்துடன் எழுந்தருளியிருக்கும் பிறைச் சந்திரனைத் தலையிலேயுடைய நிலைபெற்ற சோதியான சிவபிரானேயாவர்.

பழகுந் தொண்டர்வம், அழகன் அன்னியூர்க்
குழகன் சேவடி, தொழுது வாழ்மினே. 2

2. சிவநெறியிற் பயிலும் தொண்டர்களே! இங்கு வருவீர்களாக. திருஅன்னியூரில் கோயில் கொண்டுள்ள இளமைக் கோலத்தினனான சிவபிரானது திருவடிகளைத் தொழுது வாழ்வீர்களாக.

வம்—வாருங்கள். குழகன்—இளையவன்.

நீதி பேணுவீர், ஆதி அன்னியூர்ச்
சோதி நாமமே, ஓதி உய்ம்மினே. 3

3. சாத்திர நியதிகளைப் பேணி அதன்படி ஒழுகும் தொண்டர்களே! திருஅன்னியூரில் எழுந்தருளியுள்ள ஆதி முதல்வனும் சோதி வடிவினனுமான சிவபிரானது திருநாமங்களையே ஓதி உய்விர்களாக.

பத்த ராயினீர், அத்தர் அன்னியூர்ச்
சித்தர் தாள்தொழ, முத்த ராவரே. 4

4. சிவபக்தர்களாய் இருப்பவர்களே! திருஅன்னியூரில் கோயில் கொண்டுள்ள அத்தரும் சித்தருமாகிய சிவபெருமானது திருவடிகளைத் தொழ முத்தர்களாவது உறுதியே. (எனவே தொழுவீர்களாக என்றறிவுறுத்தியதாம்).

அத்தர் — தந்தை. சித்தர்—சித்தத்துள் நிலைபெற்றவர் அல்லது சித்திகளையெல்லாம் பக்தர்க்கு அருள்பவர்.

நிறைவு வேண்டுவீர், அறவன் அன்னியூர்
மறையு ளான்கழற், குறவு செய்ம்மினே. 5

5. குறைவில்லாத நிறைவுடன் வாழ்க்கை அமைய வேண்டுகின்றவர்களே! திருஅன்னியூரில் கோயில் கொண்டுள்ள தருமசொருபியும், மறைகளின உட்பொருளாக உள்ளவனுமாகிய சிவபிரானது திருவடிகளுக்கு அன்பு செய்வீர்களாக. (அங்ஙனம் அவன் திருவடிக்கு அன்பு செய்தால் குறைவிலா நிறைவு பெறலாம் என்பதாம்).

இன்பம் வேண்டுவீர், அன்பன் அன்னியூர்
நன்பொ னென்னுமின், உம்ப ராகவே. 6

6. இன்பகரமான வாழ்வினை வேண்டுபவர்களே! நீங்கள் தேவர்களாக ஆக வேண்டுமானால் திருஅன்னியூரில் கோயில் கொண்ட அன்பன், நல்ல பொன் போன்றவன் என்று கூறுவீர்களாக. (அங்ஙனம் துதித்தால் தேவருலக வாழ்வு பெறலாம் என்பதாம்.) கூறுதல் இங்குத் துதித்தலைக் குறித்தது.

அந்த ணாளர்தம், தந்தை அன்னியூர்
எந்தை யேயெனப், பந்தம் நீங்குமே. 7

7. உலகில் பிராமணர்களுக்குத் தெய்வம் திருஅன்னி யூரில் கோயில் கொண்ட எமது தந்தையாகிய சிவபிரானே என்று சொல்ல இவ்வுலக பாசங்கள் நீங்கும்.

''விப்ராணும் தைவதம் சம்பு'' என்ற மனு வாக்கியப்படி பிராமணர்களது தெய்வம் சிவபிரானுயிருக்க, அதனை இக் காலப் பிராமணர் சிலர் மறந்து இருப்பது கலியின் கொடுமை போலும்.

தூர்த்த னைச்செற்ற, தீர்த்தன் அன்னியூர்
ஆத்த மாவடைந், தேத்தி வாழ்மினே. 8

8. காமியாகிய இராவணனை வலியடக்கிய தீர்த்தனுகிய சிவபெருமானது திருஅன்னியூரை அன்போடு சென்று வணங்கி வாழ்வீர்களாக. திருஅன்னியூரில் கோயில் கொண்ட தீர்த்தனை வழிபடுக என்றதாம்.

தீர்த்தன் — பரிசுத்தமானவன். ஆத்தமாக — அன்பாக.

இருவர் நாடிய, அரவன் அன்னியூர்
பரவு வார்விண்ணுக், கொருவ ராவரே. 9

9. பிரம விட்டுணுக்களாகிய இருவர் தேடிய அனற் பிழம்பானவனும், திருஅன்னியூரில் கோயில் கொண்டவனு மாகிய அரவு அணிந்த சிவபிரானை வணங்குபவர் இந்திர பதவியடைவர்.

அரவன் — அரவாபரணன். விண்ணுக்கொருவர்—விண் உலகத்தை பரிபாலிக்கும் ஒருவர் அதாவது இந்திரன்.

குண்டர் தேரருக், கண்டன் அன்னியூர்த்
தொண்டு ளார்வினை, விண்டு போகுமே. 10

10. சமணர்களுக்கும் பௌத்தர்களுக்கும் அண்ட முடியாத வனுன திருஅன்னியூர்ப் பெருமானுக்குத் தொண்டராயுள்ளவர் களது வினைகள் நீங்கிப் போகும்.

பூந்த ராய்ப்பந்தன், ஆய்ந்த பாடலால்
வேந்தன் அன்னியூர், சேர்ந்து வாழ்மினே. 11

11. திருப்பூந்தராய் என்ற பெயருடைய சீகாழியில் அவதரித்த திருஞானசம்பந்தனது வேதாகமங்களின் நுட்பங்களை ஆராய்ந்து கூறிய இந்தப் பாடல்களால் திருஅன்னியூரில் கோயில் கொண்டுள்ள வேந்தனாகிய சிவபிரானைத் துதித்து வாழ்வீர்களாக.

பந்தன் — சம்பந்தன் என்பதன் முதற்குறை.

சேர்தல்—இடைவிடாது தியானித்தல். இங்குத் துதித்தல் என்று கொள்ளப்பட்டது.

சுவாமி—ஆபத்ஸஹாயேச்வரர்] [தேவி—பெரியநாயகி

சிவம்

---

## திருஞானசம்பந்தர் துதி

மதுரேசர் திருநாட்டு வந்தசமண் கழுவேற மாருஞ் சைவம்
சதுரேற மனுநீதி தழைத்தேறத் திருவேடு தமிழ்சேர் வைகை
எதிரேறத் தொண்டர்குழா மீடேறப் பரசமய இருள்விட் டோடக்
கதிரேறு மணிச்சிவிகை யேறினன் சரணமந்தக் கரணம்
சேர்ப்பாம்

—திருக்குற்றலத் தலபுராணம்

மதுரேசரது பாண்டி நாட்டில் புதிதாக வந்த சமணர்கள் கழுவேறவும், என்றும் மாறுதலடையாத சைவநெறி உயர்வு பெறவும், மனுநீதி தழைக்கவும், திருப்பாசுரம் எழுதப்பெற்ற திருஏடு வைகை நதியில் எதிரே ஏறவும், தொண்டர் கூட்டம் பெருமையடையவும், பரசமய இருள் விலகவும் ஒளிவிடும் முத்துச்சிவிகை ஏறியருளிய திருஞான சம்பந்தர் திருவடிகளை மனத்திற் கொள்வோமாக.

---




உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருமணஞ்சேரி

பதிக வரலாறு—திருஅன்னியூர் ஆபத்ஸஹாயநாதரைப் பணிந்து பாமாலைபாடிப் போற்றிய பிள்ளையார், திருப்பந்தணை நல்லூர் முதலிய பதிகளைப் பணிந்து பின்னர் திருமணஞ்சேரி என்னும் தலத்துக்குச் செப்பருஞ்சீர்த் தொண்டரோடுஞ் சென்று தொழுது பாடிய திருப்பதிகம் இது. (திருப்பந்தணை நல்லூர் பதிகம் முன்னமேயே நம் தமிழ்மாலை—8ல் வெளி யிடப்பட்டுள்ளது. இப்பொழுது பிள்ளையார் இரண்டாவது முறையாகத் தரிசித்தார் எனக்கொள்க.)

பண்-இந்தளம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

அயிலாரும் அம்பத ளுற்புர மூன்றெய்து
குயிலாரு மென்மொழி யாளொரு கூருகி
மயிலாரு மல்கிய சோலை மணஞ்சேரிப்
பயில்வானைப் பற்றிநின் ருர்க்கில்லை பாவமே. 1

பதிகப்பொழிப்புரை :— 1. கூர்மை பொருந்திய திரு மாலாகிய அம்பினுல் மூன்று புரங்களையும் எய்து, குயில் போலும் இனிமையான மொழியினையுடைய உமாதேவியார் ஒரு பாகமாகி, மயில்கள் நிறைந்த சோலைகளையுடைய திருமணஞ்சேரியில் கோயில் கொண்டு பயில்பவனுகிய சிவ பெருமானைப் பற்றி நிற்பவர்களுக்குப் பாவம் இல்லை.

பயிலுதல்—பழகுதல், இங்கு வசித்தலைக் குறித்து நின்றது. பற்றி நிற்றல் — ''பற்றுக பற்றற்ருன் பற்றினை அப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு'' என்ற திருவள்ளுவர் (திருக்குறள்-350) வாக்குப்படி, விடாது வந்த பற்று விடுவதற்கு பற்றற்றவனு கிய இறைவனைப் பற்றி நிற்றலாகும். அங்ஙனம் இறைவனைப் பற்றி நிற்றலால் உலகப்பற்று நீங்குமாகலின், பாவம் இல்லை என்ருர்.

விதியானை விண்ணவர் தாந்தொழு தேத்திய
நெதியானை நீள்சடை மேனிகழ் வித்தவான்
மதியானை வண்பொழில் சூழ்ந்த மணஞ்சேரிப்
பதியானைப் பாடவல் லார்வினை பாறுமே. 2

2. வேதாகமவிதியானவனை, தேவர்களெல்லாம் தொழுது வணங்கும் பெருஞ்செல்வமுடைய பெருமானை, நீண்ட சடையின் மீது வைத்த வானிலே ஊரும் பிறைச்சந்திரனையுடையவனை, வளமை மிக்க பொழில்கள் சூழ்ந்த திருமணஞ்சேரியில் எழுந்தருளியுள்ள தலைவனாகிய சிவபெருமானைப் பாடவல்லவர்களது வினை அழிந்து போகும்.

விதி — பிரமதேவன் என்றும் பொருள் கொள்ளலாம். நெதி — செல்வம், நிதி என்பதன் மரூஉ. பாறும் — அழியும். பாடவல்லவர்கள்—சிவபிரானின் பொருள்சேர் புகழ் அமைந்த இனிய இசைகளைப் பாட வல்லவர்கள்.

எய்ப்பானார்க் கின்புறு தேனளித் தூறிய
இப்பாலாய் என்னையும் ஆள வுரியானை
வைப்பான மாடங்கள் சூழ்ந்த மணஞ்சேரி
மெய்ப்பானை மேவிநின் றார்வினை வீடுமே. 3

3. (எல்லாப் பிறப்பும் பிறந்து) இளைத்துப் பின் தொண்டரானவர்க்கு இன்பமளிக்கின்ற தேன் போன்ற சிவமுத்தியாகிய பேரின்பத்தையளித்து அவர் தம்முள் ஒன்றிரண்டெனாதபடி கலந்து நிற்பவனும், இப்பாலாய் என்னையும் அந்த நிலைக்கு ஆட்கொள்ள உரியவனும், பெருமை மிக்க மாடங்கள் சூழ்ந்த திருமணஞ்சேரியில் எழுந்தருளியுள்ள மெய்ப்பொருளானவனுமான சிவபிரானை விரும்பி அவ்விருப்பத்தில் நிலைத்து நின்றவர்களது வினைகள் அழிந்து போகும்.

எய்ப்பு ஆனார் — எய்ப்பு என்பது மாணிக்கவாசகர் சிவபுராணத்தில் குறிப்பிட்ட எல்லாப் பிறப்பும் பிறந்து இளைத்த இளைப்பு ஆகும். ஆனார் என்பது, அங்ஙனம் இளைத்தவர் மீண்டும் இளையாதவாறு திருவடி கண்டு இன்புறத் தொண்டராக ஆனவர் என்பதையும் குறிக்கும். ''மெய்யே உன் பொன்

அடிகள் கண்டின்று வீடுற்றேன்" (சிவபுராணம் - 22) என்று அருளியதையும் இங்கு ஒப்பு நோக்குக. இதுவே சிறந்த பொருள் என்று எமது உள்ளத்தில் உறுதியாகின்றது. ஆள வுரியான் — சிவபிரானே நமது பதியாகையால் அவனே நம்மை ஆண்டுகொள்ள உரிமை உடையவன் என்பதாம். வைப்பான — உண்டாக்கப்பட்ட அல்லது பெருமையுடைய. மெய்ப்பானை — மெய்ப்பொருள் அதாவது 'ஸத்' என்று வேதங்கள் கூறும் பொருள். முக்காலத்திலும் எவ்விதமாறுதலின்றி ஒரே படித்தாய் நிற்கும் பொருள் என்பதாம். மேவி நிற்றல் — விரும்பி நிற்றல்.

விடையானை மேலுல கேழுமிப் பாரெலாம்
உடையானை ஊழிதோ றூழி யுளதாய
படையானைப் பண்ணிசை பாடு மணஞ்சேரி
அடைவானை அடையவல் லார்க்கில்லை அல்லலே. 4

4. ஊர்தியாக ஒரு எருதினை உடையவனும், மேலுலகம் ஏழும் மற்றும் இந்தப்பார்மண்டலம் முழுவதும் தனது உடைமையாக உடையவனும், ஊழிதோறும் உள்ளதாகிய பூதப் படையினை உடையவனும், பண்ணொடு பொருந்திய இசைப் பாடல்கள் பாடப்படுதலையுடைய திருமணஞ்சேரி என்னுமித் தலத்தைத் தனது உறைவிடமாகச் சென்று அடைபவனுமாகிய சிவபெருமானைச் சரணடையவல்லவர்களுக்குத் துன்பம் இல்லையாம். ஊழி - யுகம்.

எறியார்பூங் கொன்றையி னோடு மிளமத்தம்
வெறியாருஞ் செஞ்சடை யார மிலைத்தானை
மறியாருங் கையுடை யானை மணஞ்சேரிச்
செறிவானைச் செப்பவல் லார்க்கிடர் சேராவே. 5

5. ஒளி பொருந்திய அழகிய கொன்றையோடு இளமையான ஊமத்தம் மலரையும் மணம் நிறைந்த தனது சிவந்த சடையில் பொருந்தச் சூடினவனும், மான் கன்றை ஏந்திய ஒரு திருக்கரத்தினையுடையவனும், திருமணஞ்சேரியில் நெருங்கி இருப்பவனுமாகிய சிவபிரானைச் செப்பவல்லவர்களுக்குத் துன்பங்கள் வந்து சேரா.

எறிந்தல் - ஒளிவிடுதல், வெறி - மணம், மிலேத்தல் - சூடுதல், மறி-மான் கன்று, செறிதல்-நெருங்குதல், செப்புதல்-புகழ் பாடுதல் ''பன்னும் சீர் வாயதுவே'' என்று பிள்ளையார் பிறிதோரிடத்தும் அருளிச்செய்துள்ளார்.

மொழியானை முன்னொரு நான்மறை ஆறங்கம்
பழியாமைப் பண்ணிசை யான பகர்வானை
வழியானை வானவ ரேத்து மணஞ்சேரி
இழியாமை யேத்தவல் லார்க்கெய்து மின்பமே. 6

6. தமிழ், ஸம்ஸ்கிருதம் முதலிய மொழிகளின் வடிவானவனும், நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் முன்பு மொழிந்து அவற்றைப்பழியாதவாறு காத்தருள்பவனும், பண்களையும் இசைகளையும் சொன்னவனும், அறநெறியானவனும், தேவர்கள் ஏத்தும் திருமணஞ்சேரியில் எழுந்தருளியவனுமான சிவபெருமானை இகழாது வழிபட வல்லவர்களுக்கு இன்பம் வந்து சேரும்.

மொழி — இது 'சொல்' என்ற பொருளும் தருமாயினும் பின் 9ம் திருப்பாடலில் 'சொல்லானை' என்றருளிச் செய்துள்ளபடியால், இங்கு வடமொழி, தென்மொழி முதலிய மொழிகளெனப் பொருள் கொண்டோம்.

பழியாமை — நான்மறைகளையும், ஆறு அங்கங்களையும் படைத்தவன் சிவபிரானேயாதலால் அவற்றைப் பழியாதவாறு காத்தலும் அவனுடைய கடமையேயாகும் (திருத்தருமையாதீனக் குறிப்புரை).

வழி — இங்கு அறநெறியைக் குறித்தது. மற்றும் வேத ஆகமநெறி திருவருள்நெறி இவையும் கொள்க. இழியாமை-இகழாது.

எண்ணானை எண்ணமர் சீரிமை யோர்கட்குக்
கண்ணானைக் கண்ணொரு மூன்று முடையானை
மண்ணானை மாவயல் சூழ்ந்த மணஞ்சேரிப்
பெண்ணானைப் பேசநின் றார்பெரி யோர்களே. 7

7. எவராலும் மனத்தில் எண்ணி அறியப்படாத மனு தீதனும், முப்பத்து முக்கோடி என்ற அளவுக்கு உட்பட்ட சிறப்புடைய தேவர்களுக்குக் கண்ணாய் இருப்பவனும், மூன்று கண்களையுடையவனும், நிலத்தின் வடிவானவனும், பெரிய வயல்கள் சூழ்ந்த திருமணஞ்சேரியில் எழுந்தருளியிருக்கும் மாதொரு பாகனுமான சிவபெருமானைப் பேச வல்லவர்கள் பெரியோர் ஆவர்.

எண்ணனை — நினைப்பு என்பதொன்று இல்லாதவனை, அவ்வழி மறப்பும் இல்லாதவன் என்றும் கொள்ளலாம். பெண்ணன்-பெண்ணையுடையவன், மங்கை பங்கன். பேசுதல்-சிவன் புகழ் பாடுதலைக் குறித்தது.

எடுத்தானை எழில்முடி எட்டு மிரண்டுந்தோள்
கெடுத்தானைக் கேடிலாச் செம்மை யுடையானை
மடுத்தார வண்டிசை பாடு மணஞ்சேரி
பிடித்தாரப் பேணவல் லார்பெரி யோர்களே. 8

8. திருக்கயிலைமலையை எடுத்தவனாகிய இராவணனது பத்து தலைகளையும் இருபது தோள்களையும் அழுத்தி அவனது வலிமையை அழித்தவனும், ஒரு நாளும் அழிவில்லாத திருநின்ற செம்மையெனப்படும் பேரின்பம் உடையவனும், வண்டுகள் தேனை நிறைய உண்டு இசைபாடுகின்ற திருமணஞ்சேரியில் கோயில் கொண்டவனுமான சிவபெருமானை நன்கு பற்றிக் கொண்டு பத்தி செய்யவல்லவர்கள் பெரியோர் ஆவர்.

திருப்பிரமபுரத்து நட்டபாடைப் பண்ணில் அமைந்த முதல் திருப்பதிகம் 2 வது திருப்பாடலில் கற்றல் கேட்டல் உடையோர் பெரியோர் எனக்கூறிய பிள்ளையார் இங்குப் பெரியோர் இலக்கணத்தை மேலும் விதந்து கூறியருளினர் எனக்கொள்க. கற்றல் கேட்டலின் பயன் இறைவரைத் துதித்தலும் பத்தி செய்தலுமேயாம் என்று அறிவுறுத்தியதாகக் கொள்க. பேணுதல் — பக்தி செய்தல், தொண்டு செய்தல்.

சொல்லானைத் தோற்றங்கண் டானு நெடுமாலும்
கல்லானைக் கற்றன சொல்லித் தொழுதோங்க

வல்லார்நன் மாதவ ரேத்து மணஞ்சேரி
எல்லாமாம் எம்பெரு மான்கழல் ஏத்துமே. 9

9. சொல்வடிவானவனும், பிரமதேவனும் திருமாலும் கற்றுணரப்படாத பெருமையுடையவனும், தாம் கற்றறிந்த சிவனுர் திருப்புகழ்களையெல்லாம் பாடித்தொழுது அதனுல் உயர்ச்சி பெற வல்லவர்களாகிய நல்ல பெரிய தவமுடையவர்கள் வழிபடும் திருமணஞ்சேரியில் அனைத்தும் தானேயாய்க் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருமானுமாகிய சிவபிரானது திருவடிகளைத் தொழுவீர்களாக.

சொல்லானை — 'சொல்லும் பொருளெலாம் ஆனுய் நீயே' (6ம் திருமுறை, 78ம் பதிகம் 5ம் பாடல்) என்ற அப்பரடிகளின் திருவாக்கு இங்கு ஒப்பு நோக்குதற்குரியது.

தோற்றம் கண்டான்—'தோற்றம்' என்பது படைப்புத் தொழிலையும் 'கண்டான்' என்பது அத்தொழிலைச் செய்தவனையும் குறிக்கும். எனவே இச்சொற்றொடர்க்குப் பொருள் பிரம தேவன் ஆகும்.

கல்லானை — பிரமதேவன், திருமால் ஆகியோர் மற்றைய தேவர்களைவிடப் பெரியராயிருந்தும் சிவபிரானது தன்மையை முழுதும் அறிந்தார் இல்லை என்பதாம்.

எல்லாமாம் எம்பெருமான் — ''எல்லாம் சிவன் என நின்ருய் போற்றி'' (அப்பரடிகள், திருவதிகை போற்றித்திருத் தாண்டகம் 1ம் பாடல்) மற்றும் அப்பரடிகளின் நின்ற திருத் தாண்டகமும், வேதத்துள் திருவுருத்திரமும் இறைவர் எல்லாமாயிருக்கும் தன்மையை விதந்து கூறும்.

சற்றேயுந் தாமறி வில்சமண் சாக்கியர்
சொற்றேயும் வண்ணமொர் செம்மை யுடையானை
வற்ருத வாவிகள் சூழ்ந்த மணஞ்சேரி
பற்ருக வாழ்பவர் மேல்வினை பற்ருவே. 10

10. அறிவு என்பது ஒரு சிறிதுகூட இல்லாத சமணர்கள், சாக்கியர்களாகிய புறச்சமயிகளின் சொற்கள் நிலைத்து

நிற்காது அழிந்து போகும்படிச் செய்கின்ற செம்மைநெறி உடையவனும், என்றும் நீர்வற்ருத நீர்நிலைகள் நிறைந்த திருமணஞ்சேரியில் எழுந்தருளியிருப்பவனுமான சிவபெருமானையே தமக்குப் பற்றுக் கோடாக வாழ்பவர்கள்மேல் வினைகள் வந்து பற்ரு. (பற்றுதல் — பிடித்துக் கொள்ளுதல்.)

சொல்தேய்தல் — பொருளற்ற, பயனற்ற பிதற்றல்களாய் அழிந்து போதல். செம்மைநெறி—செம்பொருளாம் சிவமாகிய செம்மையை அடையும் நெறி, பக்தி நெறி. பற்ருக வாழ்தல்- சிவபெருமானையே ஆதாரமாகக் கொண்டு வாழ்தல்.

கண்ணுருங் காழியர் கோன்கருத் தார்வித்த
தண்ணுர்சீர் ஞானசம் பந்தன் தமிழ்மாலை
மண்ணுரு மாவயல் சூழ்ந்த மணஞ்சேரி
பண்ணுரப் பாடவல்லார்க் கில்லை பாவமே. 11

திருச்சிற்றம்பலம்

11. மூங்கில்கள் நிறைந்த சீகாழித் தலைவனுகிய திருஞானசம்பந்தன் நிலவளம் மிக்க பெரிய வயல்கள் சூழ்ந்த திருமணஞ்சேரிப் பெருமானைச் சிறந்த கருத்துகள் நிறைவித்துப் பாடிய தண்மை பொருந்திய பெருமையுடைய இந்தத் தமிழ் மாலையினைப் பண்ணுரப் பாட வல்லவர்க்குப் பாவம் இல்லையாம்.

கண்—மூங்கில். தண்ணுர்சீர்—தண்மை இங்குத் திருவருட் குளிர்ச்சியினைக் குறித்தது.

சுவாமி— [தேவி—
அருள்வள்ளல்நாதர்] யாழினும் மென்மொழியம்மை

சிவம்



உ
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# [திருத்துருத்தியும்] திருவேள்விக்குடியும்

பதிக வரலாறு : வேதத்தைத் தமிழால் விரித்த திருஞான சம்பந்தர் திருமணஞ்சேரியில் இறைவரைத் தரிசித்துத் தண்டமிழ்மாலை பாடித் துதித்த பின்னர், எப்பொருளுந்தரும் ஈசரது திருஎதிர்கொள்பாடி தரிசித்து ஒப்பில் பதிகங்கள் பாடி, ஓங்கு திருவேள்விக்குடி அடைந்தார். இங்கு இறைவர் உமா தேவியாரொடும் பகலில் திருத்துருத்தியிலும் இரவில் திருவேள்விக்குடியிலுமாக மணவாளக் கோலத்துடன் திகழும் தன்மையைத் துதித்துப்பாடிய செந்தமிழ்ப் பதிகம் இது. (திருஎதிர்கொள்பாடி பிள்ளையார் பதிகம் கிடைத்திலது.)

பண்-சாதாரி] திருச்சிற்றம்பலம் [3-ம் திருமுறை

ஓங்கிமேல் உழிதரும் ஒலிபுனற் கங்கையை ஒருசடைமேல்
தாங்கினார் இடுபலி தலைகல னுக்கொண்ட தம்மடிகள்
பாங்கினால் உமையொடும் பகலிடம் புகலிடம் பைம்பொழில்சூழ்
வீங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 1

பதிகப் பொழிப்புரை 1. மேலும் மேலும் பொங்கியெழுந்து சுழித்து வந்த ஒலிமிக்க கங்கையாற்றின் வெள்ளத்தை ஒரு சடையின் மேல் தாங்கினவரும், இடுகின்ற பிச்சையை ஏற்கத் தலையோட்டினையே பாத்திரமாகக் கொண்ட அடிகளாரும் ஆகிய சிவபிரான், உமாதேவியாரோடு அழகாகப் பகற்காலத்தில் தங்குமிடமாகப் பசிய சோலைகள் சூழ்ந்ததும் பெருகிய நீரின் நடுவே அமைந்ததுமான திருத்துருத்தி என்னும் தலத்தை உடையவர். அப்பெருமானே இரவில் திருவேள்விக் குடியில் தங்கியிருப்பார்.

ஓங்கிமேல் உழிதரும் ஒலிபுனற்கங்கை என்பது உலகத்தையே அழிக்கும் வண்ணம் வந்த கங்கை என்று அதன் வேகத்தைச் சுட்டிக்காட்டியதாம். ஒரு சடைமேல் தாங்கினுன் என்பது அவ்வளவு பெருக்குடைய நீரைத் தன் ஒரு சடையில் தாங்கிய பெருமானின் ஆற்றலைக் குறிப்பிட்டதாம். முன் திருப்புள்ளிருக்குவேளூர்ப்பதிகத்திலும் 10வது திருப்பாடலில் ''கடுத்துவருங் கங்கைதனைக் கமழ்சடையொன்ருடாமே தடுத்தவர்'' என்று அருளிச்செய்ததும் காண்க. சிவபெருமானைத் தவிர வேறு எவரும் கங்கையின் வேகத்தைத் தாங்கும் ஆற்றல் உடையவரல்லர் என்பது இராமாயணம், மஹாபாரதம், மற்றும் புராணங்கள், இலக்கியங்கள் வாயிலாகத் தேற்றமாக அறியப்படுவதாகும். நமது சிவஞான பூஜாமலர்-1985, பக்கம். 29-31, இறைவனின் இருபெருஞ்செயல்கள் என்ற கட்டுரை இதனை நன்கு விளக்கிக்காட்டும்.

தலைகலன் — பிரமகபாலமாகிய பாத்திரம். தம்மடிகள் — தமக்குத் தாமே தலைவராகிய கடவுள். பாங்கினுல் — இதற்கு முறைமையால், அதாவது பகலில் திருத்துருத்தியிலும் இரவில் திருவேள்விக்குடியிலும் தங்கும் முறையால் என்றும் பொருள் கொள்ளலாம். பகலிடம், இரவிடம் — பகற்காலம், இரவுக் காலம். புகலிடம்—தங்குமிடம். இறைவர் உமாதேவியாரோடு பகலில் திருத்துருத்தியிலும், இரவில் திருவேள்விக்குடியிலும் எழுந்தருளியிருப்பர் என்பதாம்.

தூறுசேர் சுடலையிற் சுடரெரி யாடுவர் துளங்கொளிசேர்
நீறுசாந் தெனவுகந் தணிவர்வெண் பிறைபுல்கு சடைமுடியார்
நாறுசாந் திளமுலை யரிவையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வீறுசேர் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 2

2. புதர்ச்செடிகள் சேர்ந்த சுடுகாட்டில் ஒளிவிடும் எரியுடன் ஆடுபவரும், விளக்கமான ஒளியையுடைய திருநீற்றினைக் கலவைச் சந்தனம் போல் மகிழ்ச்சியுடன் அணிந்துகொள்பவரும், வெண்மையான பிறைச்சந்திரன் பொருந்திய சடைமுடியை உடையவருமாகிய சிவபிரான், மணங்கமழும் சந்தனக்குழம்பை யணிந்த இளமையான கொங்கைகளை

உடைய உமாதேவியாரோடு பெருமையுடைய திருத்துருத்தியில் பகற்காலத்தே தங்குபவர். இரவினில் திருவேள்விக்குடியில் உறைவர்.

தூறு—கூட்டமாயமைந்த சிறுசெடிகள். வீறு—பெருமை. ஒரு பகல் — பகற் காலம் முழுவதும் என்ற பொருள் தந்து நின்றது.

மழைவளர் இளமதி மலரொடு தலைபுல்கு வார்சடைமேல்
கழைவளர் புனல்புகக் கண்டவெங் கண்ணுதற் கபாலியார்தாம்
இழைவளர் துகிலல்குல் அரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விழைவளர் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 3

3. குளிர்ச்சியுள்ள இளம்பிறையும், கொன்றை முதலிய மலர்களுடன் ஒரு வெண்தலையும் பொருந்திய நீண்ட சடையின்மீது கரும்பு முதலிய பயிர்களை வளர்க்கும் நீராகிய கங்கை நதியினைத் தங்கச்செய்த எமது கண்ணுதற்கடவுளாகிய கபாலமேந்திய சிவபிரானார், உமாதேவியாரோடு பகற் காலத்தில் விருப்பம் வளர்தலுடைய திருத்துருத்தியில் எழுந்தருளியவராயமர்ந்த பிரானவர். அவரே இரவுக்காலத்தில் திருவேள்விக்குடியில் எழுந்தருளியிருப்பர்.

கழை — கரும்பு. கண்ணுதல் - கண் பொருந்திய நெற்றியையுடையவர். இழைவளர் துகில் - பஞ்சின் நூல்கள் சேர்ந்த ஆடை. விழை - விருப்பம். தரிசிப்பதற்கு மேலும் மேலும் விருப்பம் வளரும் தலம் திருத்துருத்தி என்பதனை விழைவளர் துருத்தியார் என்று குறிப்பிட்டார்.

கரும்பன வரிசிலைப் பெருந்தகைக் காமனைக் கவினழித்த
சுரும்பொடு தேன்மல்கு தூமலர்க் கொன்றையஞ் சுடர்ச்சடையார்
அரும்பன வனமுலை அரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விரும்பிடந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 4

4. கரும்பாகிய கட்டமைந்த வில்லையுடைய பெருந்தகையான மன்மதனை அவனது அழகிய உடலை அழித்த, வண்டுகளோடு தேனும் பெருகும் தூய கொன்றை மலர் விளங்கும்

அழகிய ஒளிமிக்க சடைமுடியையுடையவராகிய சிவபிரான், தாமரை மொட்டுப் போன்ற அழகிய திருமுலைகளையுடைய உமாதேவியாரோடு தாம் விரும்பிய இடமாகப் பகல் காலத்தில் திருத்துருத்தியில் தங்குபவராவர். அவரே இரவில் திருவேள்விக்குடியில் தங்குவார்.

பெருந்தகைக்காமன் — சிவபிரானது யோக நிலையைக் கலைத்தால் தனக்கு இறுதி நேரிடுமென்று திண்ணமாயறிந்தும், தேவர்கள் துயர் தீர்தலைக் கருதி இறைவர் மீது மலர் வாளி எய்யச் சென்றனனாகலின் அவனைப் பெருந்தகை என்றார்.

வளங்கிளர் மதியமும் பொன்மலர்க் கொன்றையும் வாளரவும்
களங்கொளச் சடையிடை வைத்தளங் கண்ணுதற் கபாலியார்தாம்
துளங்குநூன் மார்பினர் அரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
விளங்குநீர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விககுடியே. 5

5. அழகு மிளிரும் சந்திரனும், பொன்னிறம் வாய்ந்த கொன்றை மலரும், ஒளியுடன் கூடிய பாம்பும் தமக்கு இடமாகக் கொள்ள சடைமுடியின் மீது வைத்தருளிய எமது நெற்றிக் கண்ணராகிய கபாலம் ஏந்திய திருக்கோலத்தினரும், அசைகின்ற பூணூல் விளங்கும் மார்பினருமான சிவபிரான் உமாதேவியாரோடு பகற் காலத்தில் விளக்கம் மிக்க நீர்வளம் பொருந்திய திருத்துருத்தியாராய் அமர்ந்த பிரானவர். அவரே இரவினில் திருவேள்விக்குடியில் உறைபவர் ஆவர்.

வளம் — அழகு. களங்கொள — இடமாகக் கொள்ள. துளங்குநூல் — அசையும் பூணூல். நீர்த்துருத்தி — நீர்வளம் மிக்க துருத்தி என்றேனும் நீரின் நடுவில் அமைந்த துருத்தி என்றேனும் கொள்ளலாம்.

பொறியுலாம் அடுபுலி யுரிவையர் வரியராப் பூண்டிலங்கும்
நெறியுலாம் பலிகொளும் நீர்மையர் சீர்மையை நினைப்பரியார்
மறியுலாங் கையினர் மங்கையோ டொருபகல் அமர்ந்தபிரான்
வெறியுலாந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 6

6. பொலிவுடையதும், கொல்லும் தன்மையுடையது மான புலியின் தோலையுடையவரும், நெடிய பாம்பினை அணி யாகப் பூண்டு தெருக்களில் திரிந்து பிச்சை ஏற்கும் தன்மை யுடையவரும், எவராலும் நினைத்துப் பார்க்கவும் முடியாத பெருமை உடையவரும், மான்கன்று ஏந்திய திருக்கரத்தின ரும் ஆகிய சிவபிரான் உமாதேவியாரோடு பகற் காலத்தில் மணம் வீசும் திருத்துருத்தியை இடமாகக் கொண்டு தங்குவர். இரவுக் காலத்தில் திருவேள்விக்குடியில் உறைவார்.

சீர்மையை நினைப்பரியார் — நினைப்பரிய சீர்மையார் என மாற்றி பொருள் கொள்ளப்பட்டது. ''நினைய வல்லவர் இல்லை நீணிலத்தே'' என்ற திருவெழுகூற்றிருக்கை கடைசி அடிக்கு இப்படியும் பொருள் கொள்ளலாம்.

வெறியுலாம் துருத்தி — துருத்தி என்பது ஆற்றின் இடை யில் அமைந்த மணல் திட்டு. அங்கு உள்ள மரங்கள் உதிர்த்த பூந்தாதுக்களால் மணம் பெற்றது என்று கொள்க.

புரிதரு சடையினர் புலியுரி யரையினர் பொடியணிந்து
திரிதரும் இயல்பினர் திரிபுர மூன்றையுந் தீவளைத்தார்
வரிதரு வனமுலை மங்கையோ டொருபகல் அமர்ந்தபிரான்
விரிதரு துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 7

7. முறுக்கிய சடையினையுடையவரும், புலியின் தோலை அரையில் உடுத்தவரும், திருநீற்றினைப் பூசிக்கொண்டு திரியும் தன்மையரும், விண்ணிலே திரியும் இயல்பினவாய மூன்று புரங்களையும் தீயால் வளைவித்து எரித்தவரும், சந்தனக்கீற்று கள் எழுதப் பெற்ற அழகிய திருமுலைகளையுடைய உமாதேவி யாரோடு பகலில் திருத்துருத்தியை இடமாகக் கொண்டு அமர்ந்தவருமாகிய சிவபிரான் இரவில் திருவேள்விக்குடியில் உறைபவர் ஆவர்.

நீண்டிலங் கவிரொளி நெடுமுடி யரக்கன்இந் நீள்வரையைக்
கீண்டிடந் திடுவனென் றெழுந்தவ னுள்வினை கீழ்ப்படுத்தார்
பூண்டநூல் மார்பினர் அரிவையோ டொருபக லமர்ந்தபிரான்
வேண்டிடந் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 8

8. நெடுந்தூரம் விளங்கிப் பிரகாசிக்கும் பெரிய கிரீடத்தையுடையவனும், இக்கயிலாய மலையினைப் பெயர்த்து எடுத்து அப்பாலிடுவேன் என்று ஆணவத்துடன் எழுந்தவனுமாகிய இராவணனது முயற்சியினைக் (தம் கால் விரலொன்றால் அழுத்தி) கீழ்ப்படுத்தியவரும், பூணூலையணிந்த திருமார்பினரும், உமாதேவியாரோடு பகற்காலத்தில் விரும்பத்தக்க இடம் திருத்துருத்தியாக அமர்ந்தவருமாகிய சிவபிரான் இரவுக் காலத்தில் திருவேள்விக்குடியில் உறைபவராவர்.

கரைகடல் அரவணைக் கடவுளுந் தாமரை நான்முகனும்
குரைகழ லடிதொழக் கூரெரி யெனநிறங் கொண்டபிரான்
வரைகெழு மகளொடும் பகலிடம் புகலிடம் வண்பொழில்சூழ்
விரைகமழ் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே. 9

9. ஒலிக்கின்ற கடலில் பாம்பணையில் துயில் கொள்ளும் திருமாலும், தாமரை மலரை இருப்பிடமாகக் கொண்ட பிரமதேவனும் (தமது செருக்கு நீங்கி) ஒலிக்கும் வீரக்கழல்களை அணிந்த திருவடிகளைத் தொழுமாறு மிக்கதான தீப்பிழம்பின் வடிவங்கொண்ட சிவபிரான், மலைமகளாகிய உமாதேவியாருடன் பகற்காலத்தே தங்குமிடமாக மணம் வீசும் திருத்துருத்தியை உடையவராவர். அவரே, இரவுக்காலத்தில் திருவேள்விக்குடியில் உறைபவராவர். நிறம் - இங்கு வடிவு என்னும் பொருளில் வந்தது. குரைகழல் - ஒலிக்கின்ற வீரக்கழல்கள்.

அயமுக வெயினிலை அமணருங் குண்டருஞ் சாக்கியரும்
நயமுக வுரையினர் நகுவன சரிதைகள் செய்துழல்வார்
கயலன வரிநெடுங் கண்ணியோ டொருபகல் அமர்ந்தபிரான்
வியன்நகர்த் துருத்தியார் இரவிடத் துறைவர்வேள் விக்குடியே.

10. கொடிய வெயிலில் நிற்றலையுடைய குண்டர்களாகிய சமணர்களும் பௌத்தர்களும் இன்முகத்தோடு நயமாகப் பேசி மக்களை மயக்கும் உரையினராய் நகைக்கத்தக்க கதைகளைக்கட்டி மக்களை ஏமாற்றித் திரிபவர் ஆவர். (எனவே அவரது உரைகளைக் கொள்ளாது) கயல்மீன் போன்ற அழகிய நீண்ட கண்களையுடைய உமாதேவியாருடன் பகற்காலத்தில்

அகன்ற நகராகிய திருத்துருத்தியில் அமர்ந்த பிரானுகிய சிவ பெருமான் இரவிடத்து திருவேள்விக்குடியில் உறைபவராவர். (அவரது திருவடிகளேச் சார்பாகக் கொண்டு நற்கதி பெறுவீர் களாக என்று உலகத்தவர்க்கு உபதேசித்தது கண்டுகொள்க)

அயம் முகம் வெயில் — பழுக்கக் காய்ச்சிய இரும்பு போற் சுடும் வெயில் (தருமையாதீனக் குறிப்புரை). இத்தகைய கடு வெயிலில் நிற்பதைத் தவமாகக் கொண்டனர் சமணத்துறவி கள். நயமுகஉரையினர் - இன்முகம் காட்டிப் பேசித் தம் வஞ்சக வலேக்குள் மக்களே இழுப்பவர். நகுவன சரிதைகள் என்பது எலிவிருத்தம், கிளிவிருத்தம், நரிவிருத்தம் போன்ற புனேகதைகளேச் செய்தனர் என்பதாம். இதனேப்பிள்ளேயார் திருஆலவாய்ப் பதிகமொன்றிலும் "கூட்டிஞர் கிளியின் விருத் தம் உரைத்ததோரொலியின் தொழில்" என்று குறிப்பிட்டுள் ளார். (3ம் திருமுறை, 39ம் பதிகம், 5ம் பாடல்). பௌத்தர் கள் புனேந்தவை புத்த சாதகக் கதைகளாம்.

விண்ணுலாம் விரிபொழில் விரைமணல் துருத்திவேள்விக்குடியும்
ஒண்ணுலாம் ஒலிகழல் ஆடுவார் அரிவையோ டுறைபதியை
நண்ணுலாம் புகலியுள் அருமறை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணுலாம் அருந்தமிழ் பாடுவார் ஆடுவார் பழியிலரே. 11

திருச்சிற்றம்பலம்

11. ஒளி நிறைந்த ஒலிக்கும் கழல்களுடன் ஆடுபவராகிய சிவபெருமான் உமாதேவியாரோடு உறையும் பதியாகிய, விண்ணளவுயர்ந்த பொழில்கள் நிறைந்த மணம் பொருந்திய மணற்பரப்புடைய திருத்துருத்தி, திருவேள்விக்குடி ஆகிய வற்றை அனேவராலும் நண்ணுதலேயுடைய திருப்புகலியில் அவதரித்த அருமறை ஞானசம்பந்தன் பாடிய பண்ணெடு கூடிய இந்த அரிய தமிழ்ப்பதிகத்தை பாடுபவர்களும், பாடிப் பரவசமடைந்து ஆடுபவர்களும் எவ்விதமான பழியும் பாவமும் இல்லாதவராவர்.

ஒண் உலாம் கழல், ஒலி கழல் என ஈரிடத்தும் கூட்டிப் பொருள் கொள்க. உறைபதி என்று ஒருமையில் கூறியது திருத்துருத்தியும் திருவேள்விக்குடியும் ஒரே தலமாக கருதப்

பட்டுப் பாடப்பெற்றமையாலென்க. திருத்துருத்தி குத்தாலம் எனவும் வழங்கப்படும். இது காவிரித் தென்கரை 37 வது தலமாகத் தனியாகவும் போற்றப்பட்டுள்ளது.

நண்ணுலாம்—நண்ணுதல் பொருந்திய அதாவது அனைவராலும் புகலிடமாக அடையப் பெறுவது என்பதாம். பாடுதலும் ஆடுதலும் செய்பவர்கள் பழியோடு உபலக்ஷணத்தால் பாவமும் இலராவர் என்பது பதிகப்பயன்.

சுவாமி—கலியாணசுந்தரர்] [தேவி—பரிமளசுகந்தநாயகி

சிவம்

---

## திருஞானசம்பந்தர் துதி

பிரமபுரச் செழுஞ்சுடரை வேணுபுரக் கோவைப்
பேசுகொச்சை வயஅமுதைப் பூந்தராய்ப் பேற்றைச்
சிரபுரக் கல்விக்கடலைப் புறவநான் மறையைத்
திருத்தோணிபுரக் கனியைச் சண்பைநறுந் தேனை
விரகுறு காழிப்பொருளைக் கழுமலப்பே ரொளியை
மிகுபுகலிக் குணவரையை வெங்குரு நாயகத்தைத்
தரணி அமணழித்த பரசமயக் கோளரியைத்
தப்பாமல் தினந்தேரறும் மெய்ப்பாகப் பணிவாம்.

—திருச்சுழியற்புராணம்

இப்பாடலில் சீகாழியின் பன்னிரு திருப்பெயர்களுடன் இணைத்துத் திருஞானசம்பந்தரைச் செழுஞ்சுடர், கோ, அமுது, பேறு, கல்விக்கடல், நான்மறை, கனி, நறுந்தேன், பொருள், பேரொளி, குணவரை, நாயகம், பரசமய கோளரி என்றெல்லாம் துதித்திருப்பது அறிந்து இன்புறுவோமாக.

௨
சிவமயம்
ஸ்ரீமஹாதேவஜயம்

# திருக்கோடிகா

பதிகவரலாறு: திருவேள்விக்குடியில் இறைவரைத் தரிசித்து, பகலில் திருத்துருத்தியிலும், இரவில் திருவேள்விக்குடியிலுமாக எழுந்தருளியிருக்கும் பான்மையைத் துதித்துப்பாடிய பின், பிறைச்சந்திரனையணிந்த பெருமானரது திருக்கோடிகா சென்றடைந்த திருஞானசம்பந்தர் அங்கமர்ந்த தேவர் சிகாமணியைப் பணிந்து பாடிய சொல்மாலை இது.

பண்-நட்டராகம்] திருச்சிற்றம்பலம் [2-ம்திருமுறை

இன்றுநன்று நாளைநன் றென்றுநின்ற இச்சையால்
பொன்றுகின்ற வாழ்க்கையைப் போகவிட்டுப் போதுமின்
மின்தயங்கு சோதியான் வெண்மதி விரிபுனல்
கொன்றைதுன்று சென்னியான் கோடிகாவு சேர்மினே. 1

பதிகப்பொழிப்புரை: 1. இன்று நன்மை உண்டாகும், நாளை நன்மை உண்டாகும் என்று நின்ற ஆசையினுல் வாழ்கின்ற இந்த அழியக்கூடியதான வாழ்க்கையைப் போகவிட்டு மெய் வாழ்வு பெற, உலகீரே, வருவீர்களாக, மின்னல் போன்ற ஒளியுள்ள சோதியானும், வெண்மையான சந்திரன் கங்கைநதி கொன்றை ஆகியவை நெருங்கியிருக்கும் தலையினை உடையவனுமாகிய சிவபிரான் எழுந்தருளியுள்ள திருக்கோடிகாவைச் சென்று அடைவீர்களாக. இன்று, நாளை என்பன முறையே நிகழ்காலத்தையும் எதிர்காலத்தையும் குறித்தன.

அல்லல்மிக்க வாழ்க்கையை ஆதரித் திராதுநீர்
நல்லதோர் நெறியினை நாடுதுந் நடம்மினே
வில்லையன்ன வாணுதல் வெள்வளையொர் பாகமாம்
கொல்லைவெள்ளை யேற்றினன் கோடிகாவு சேர்மினே. 2

2. துன்பம் மிக்க இந்த வாழ்க்கையை விரும்பி இராது நல்லதொரு வழியினை நாடுவோம், வருவீர்களாக. வில்லை யொத்த ஒளிபொருந்தியநெற்றியையுடையவளும்,வெண்சங்கு வளையல்களையணிந்தவளுமான உமாதேவியாரை ஒரு பாக மாகக் கொண்டவனும், முல்லை நிலக்கடவுளாகிய திருமாலை ஏறும் இடபவாகனமாகக் கொண்டவனுமான சிவபெருமானது திருக்கோடிகாவைச் சென்று அடையுங்கள்.

துக்கமிக்க வாழ்க்கையின் சோர்வினைத் துறந்துநீர்
தக்கதோர் நெறியினைச் சார்தல்செய்யப் போதுமின்
அக்கணிந் தரைமிசை யாறணிந்த சென்னிமேல்
கொக்கிற கணிந்தவன் கோடிகாவு சேர்மினே. 3

3. துக்கம் மிகுந்ததான இந்த வாழ்க்கையினால் உண் டான இளைப்பினையொழித்து, தக்கதானதொரு நல்ல கதியை அடைய வருவீர்! அரையின் மீது எலும்பினையணிந்து கங்கை யாற்றினைச்சூடிய தலையின்மேல் கொக்கின் இறகு அணிந்தவ னாகிய சிவபிரானது திருக்கோடிகாவைச் சென்று சேர்வீர் களாக. கொக்கிறகு - கொக்கின் வடிவு கொண்ட ஒரு அசுரனைக்கொன்று அவ்வீரத்தின் அடையாளமாக அதன் இறகினையணிந்துகொண்டார் என்ற ஒரு புராண வரலாறு கேட்கப்படுகிறது.

பண்டுசெய்த வல்வினை பற்றறக் கெடும்வகை
உண்டுமக் குரைப்பன்நான் ஒல்லைநீர் எழுமினோ
மண்டுகங்கை செஞ்சடை வைத்துமாதொர் பாகமாக்
கொண்டுகந்த மார்பினன் கோடிகாவு சேர்மினே. 4

4. முற்பிறவியில் செய்த தீவினைகள் உம்மைப் பற்றாது அழியும் வழி ஒன்று உளது. அதனை உமக்கு நான் உரைப் பேன். விரைந்து எழுமின், மிக்கதான பெருக்குடைய கங்கை நீரைத் தனது சிவந்த சடையில் வைத்தும், உமாதேவியாரை ஒரு பாகமாக வைத்தும் உகந்த திருமேனியுடையவனுமான சிவபெருமானது திருக்கோடிகாவைச் சென்றடையுங்கள்,

முன்னைநீர்செய் பாவத்தால் மூர்த்திபாதஞ் சிந்தியா
தின்னநீரி டும்பையில் மூழ்கிறீர் எழும்மினோ
பொன்னைவென்ற கொன்றையான் பூதம்பாட ஆடலான்
கொன்னவிலும் வேலினான் கோடிகாவு சேர்மினே. 5

5. முற்பிறவியில் நீர்செய்த பாவத்தால் இந்தப்பிறவியிலும் சிவபெருமானது திருவடிகளைத் தியானஞ்செய்யாது இப்பொழுது அனுபவிக்கும் இத்தகையதான துன்பத்தில் முழுகுகின்றீர். எழுமின், பொன்னின் நிறத்தையும் வென்ற ஒளியுடைய கொன்றை மாலையையணிந்தவனும், பூதகணங்கள் பாட அதற்கியைய ஆடும் திருக்கூத்தையுடையவனும், கூர்மையான வேலையுடையவனுமான சிவபிரானது திருக்கோடிகா சென்றடையுங்கள். வேல் இங்கு சூலத்தைக் குறித்தது.

ஏவமிக்க சிந்தையோ டின்பமெய்த லாமெனப்
பாவமெத் தனையும்நீர் செய்தொரு பயனிலைக்
காவல்மிக்க மாநகர் காய்ந்துவெங் கனல்படக்
கோவமிக்க நெற்றியான் கோடிகாவு சேர்மினே. 6

6. குற்றம் மிகுந்த மனத்தோடு, இன்பம் அடைந்துவிடலாமென்று எண்ணி, அளவில்லாத பாவத்தை நீர் செய்வதால் யாதொரு பயனுமில்லை. மிகுந்த காவலையுடையதாயிருந்த முப்புரங்களையும் கோபித்து எரிபடும்படிச்செய்த கோபம் மிக்க (கண்ணுடைய) நெற்றியையுடையவனான சிவபிரானது திருக்கோடிகா சென்றடையுங்கள்.

ஏணழிந்த வாழ்க்கையை இன்பமென் றிருந்துநீர்
மாணழிந்த மூப்பினால் வருந்தன்முன்னம் வம்மினோ
பூணல்வெள் ளெலும்பினான் பொன்திகழ் சடைமுடிக்
கோணல்வெண் பிறையினான் கோடிகாவு சேர்மினே. 7

7. பெருமையற்றதான இந்த வாழ்க்கையை இன்பமென்று நீர் இருந்து பின் மூப்பினையடைந்து அதனால் வருந்துவதன் முன்னமேயே, வருவீராக, வெண்மையான எலும்பினை

மார்பில் அணிந்தவனும், பொன்போல் ஒளிரும் சடைமுடியில் வளைந்த பிறைச்சந்திரனைச் சூடியவனுமான சிவபிரானது திருக்கோடிகா சென்று அடைவீர்.

மற்றிவாழ்க்கை மெய்யெனும் மனத்தினைத் தவிர்த்துநீர்
பற்றிவாழ்மின் சேவடி பணிந்துவந் தெழுமினோ
வெற்றிகொள் தசமுகன் விறல்கெட இருந்ததோர்
குற்றமில் வரையினான் கோடிகாவு சேர்மினே. 8

8. இவ்வாழ்க்கை மெய்யானது என்ற தவறான நினைப்பினை நீக்கி, நீவிர் இறைவரது சிவந்த திருவடிகளைப் பணிந்து வாழ்வீர், அங்ஙனம் பணிந்து எழுவீர், எங்கும் வெற்றியே பெற்ற இராவணனது வலிமை அழியும்படிச்செய்து வீற்றிருந்த திருக்கயிலாய மலையை உடையவனான சிவபிரானது திருக்கோடிகா சேர்வீர்களாக.

மங்குநோய் உறும்பிணி மாயும்வண்ணஞ் சொல்லுவன்
செங்கண்மால் திசைமுகன் சென்றளந்துங் காண்கிலா
வெங்கண்மால் விடையுடை வேதியன் விரும்புமூர்
கொங்குலாம் வளம்பொழிற் கோடிகாவு சேர்மினே. 9

9. உடலழகை மங்கச்செய்யும் நோய்களும், உயிரைப் பற்றிய பிறவியாகிய பிணியும் அழிவதற்கான ஒரு வழி சொல்வேன். சிவந்த கண்ணையுடைய திருமாலும் நான்கு திசைகளிலும் முகமுடைய பிரமதேவனும் சென்று முறையே பாதாளத்திலும் ஆகாயத்திலும் அளந்தும் காண்கிலாத, திருமாலாகிய எருதினையுடைய, எங்கள் சிவபிரான் விரும்பும் ஊராகிய மணமும் வளமும் நிறைந்த பொழில்களையுடைய திருக்கோடிகா சேர்வீர்களாக.

நோய் என்பதால் உடல் நோயையும், பிணி என்பதால் பிறவிப்பிணியும் கொள்ளப்பட்டன. திசைமுகன் - திசைக்கு ஒன்றாக நான்கு முகங்கள் பெற்றும் காண இயலாதவனாயினான் என்ற குறிப்பு.

தட்டொடு தழைமயிற் பீலிகொள் சமணரும்
பட்டுடை விரிதுகிலி னார்கள்சொற் பயனிலை
விட்டபுன் சடையினான் மேதகும் முழவொடும்
கொட்டமைந்த ஆடலான் கோடிகாவு சேர்மினே. 10

10. பனந்தடுக்கோடு தழைத்த மயிற்பீலியையுங் கொண்டு திரிகின்ற சமணர்களும், பட்டினை விரித்துப் போர்த்தியவர்களான பௌத்தர்களும் கூறும் சொற்கள் பயனற்றனவாம். (எனவே இதனை நன்கு உணர்ந்து) தொங்கவிட்ட பொன்போலுஞ்சடையை உடையவனும், பெருமையுடைய முழவுடன் பறை கொட்டுதலும் அமைந்த திருக்கூத்தினையுடையவனுமான சிவபிரானது திருக்கோடிகா சென்றடையுங்கள். முழவு - மத்தளம் போன்றதோர் ஒலியெழுப்பும் வாத்தியம். சிவபிரானின் நடனத்தின்போது நந்தியெம்பெருமான் இசைப்பது.

கொந்தணி குளிர்பொழிற் கோடிகாவு மேவிய
செந்தழ லுருவனைச் சீர்மிகு திறலுடை
அந்தணர் புகலியு ளாயகேள்வி ஞானசம்
பந்தன தமிழ்வல்லார் பாவமான பாறுமே. 11

திருச்சிற்றம்பலம்

11. கொத்துக்களாகப் பூக்கும் குளிர்ந்த மலர்ப்பொழில்கள் நிறைந்த திருக்கோடிகாவில் விருப்பத்துடன் எழுந்தருளியுள்ள சிவந்த தீயின் வடிவினனாகிய சிவபெருமானைப் புகழ்மிக்க திறலுடைய அந்தணர்கள் வாழ்கின்ற திருப்புகலியுள் அவதரித்த நன்கு ஆய்ந்த மறையாகிய கேள்வியையுடைய திருஞானசம்பந்தனது இத்தமிழ்ப்பதிகத்தை ஓதவல்லவர்களது பாவம் அழிந்து போகும். கேள்வி என்பது இங்குக் காதினால் கேட்டுப் பயிலப்படுவதாகிய மறைகளைக் குறித்தது. சுருதி என்பது வடமொழி வழக்கு. சீர்மிகுதிறல் என்றது திருப்புகலியில் வாழ்ந்த அந்தணர்களது கல்வி, கேள்வி, சிவபக்தி ஆகியவற்றின் பெருமை குறித்தது.

சுவாமி-கோடிகா ஈசுவரர்] சிவம் [தேவி-வடிவம்மை

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

# திருமங்கலக்குடி

பதிகவரலாறு: திருக்கோடிகா அமர்ந்த தேவர் சிகாமணி தன்னை விருப்போடு பாடித்துதித்த பிள்ளையார் திருக்கஞ்சனூர் திருமாந்துறை ஆகிய இரண்டு தலங்களையும் வழிபட்டு, அங்கிருந்து புறப்பட்டு அன்பர்கள் எதிர்கொள்ள செஞ்சடை வேதியர் மன்னும் திருமங்கலக்குடி சேர்ந்து அங்கு இறை வரைப் போற்றிப்பாடிய திருப்பதிகம் இது. (திருக்கஞ்சனூர், திருமாந்துறை இரண்டிற்கும் பிள்ளையார் திருப்பதிகங்கள் கிடைத்தில).

பண்-இந்தளம்] திருச்சிற்றம்பலம் [2-ம் திருமுறை

சீரி னார்மணி யும்மகில் சந்துஞ் செறிவரை
வாரி நீர்வரு பொன்னி வடமங் கலக்குடி
நீரின் மாமுனி வன்னெடுங் கைகொடு நீர்தனைப்
பூரித் தாட்டியர்ச் சிக்க விருந்த புராணனே. 1

பதிகப்பொழிப்புரை: 1. பெருமை பொருந்திய மணியும் அகில் மற்றும் சந்தனக்கட்டையும் மிக்குள்ள மலையினின்று இழிந்து வரும் நீர்ப்பெருக்கினையுடைய காவிரியின் வடகரையில் உள்ள திருமங்கலக்குடியில், ஜலமஹாரிஷி என்பவர் பூசையில் அமர்ந்த வண்ணமே தனது நீண்ட இரு கைகளையும் காவிரியாறு வரையில் நீட்டி, ஆற்றுநீரை முகந்து அபிடேகம் செய்து அர்ச்சனை புரியும்படி எழுந்தருளியிருந்த பெருமான் புராணேச்வரர் என்ற பெயருடைய சிவபெருமானுவர். புராணர் - தலத்து இறைவர் திருப்பெயர். முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம்பொருளாம் இறைவர். நீரின் மாமுனி - ஜலமஹாரிஷி என்ற வடமொழிப் பெயரின் தமிழாக்கம். பூரித்தல் - நிறைத்தல். ஆட்டி - அபிடேகித்து.

பணங்கொ ளாடர வல்குல் நல்லார்பயின் றேத்தவே
மணங்கொள் மாமயி லாலும் பொழில்மங் கலக்குடி
இணங்கி லாமறை யோரிமை யோர்தொழு தேத்திட
அணங்கி னோடிருந் தானடி யேசர ணாகுமே. 2

2. மலர்களின் நறுமணம் கொண்டவையும், மயில்கள் ஆடுதலையுமுடைய பொழில்கள் நிறைந்த திருமங்கலக்குடியில் அழகிய பெண்கள் துதித்து வணங்கவும், ஒப்பில்லாத மறையவர்களும் தேவர்களும் தொழுது வணங்கும்படியும், உமாதேவியாரோடு எழுந்தருளியிருந்தவராகிய சிவபிரானது திருவடியே நமக்குப் புகலிடமாகும். நல்லார் - பெண்கள்.

கருங்கை யானையி னீருரி போர்த்திடு கள்வனூர்
மருங்கெ லாமண மார்பொழில் சூழ்மங் கலக்குடி
அரும்பு சேர்மலர்க் கொன்றையி னானடி யன்பொடு
விரும்பி யேத்தவல் லார்வினை யாயின வீடுமே. 3

3. கரிய நிறமுடையதும் துதிக்கையினையுடையதுமான யானையின் உரித்த தோலை மேலாடையாகப் போர்த்திட்ட கள்வனும், எல்லாப்பக்கங்களிலும் மணம் நிறைந்த பொழில்கள் சூழ்ந்த திருமங்கலக்குடியில் எழுந்தருளியுள்ள அரும்பு சேர்ந்த கொன்றை மலர் மாலையணிந்தவருமாகிய சிவபிரானது திருவடிகளை பக்தியோடு விரும்பி வழிபட வல்லவர்களது வினைகளானவை அழிந்துபோம். கருங்கை யானை - கரிய யானை, கையுடைய யானை. கள்வனூர் - உள்ளங்கவர் கள்வன். அன்பு – பக்தி.

பறையி னோடொலி பாடலு மாடலும் பாரிடம்
மறையி னோடியன் மல்கிடு வார்மங் கலக்குடிக்
குறைவி லாநிறை வேகுண மில்குண மேயென்று
முறையி னால்வணங் கும்மவர் முன்னெறி காண்பரே. 4

4. பறை முதலிய தோற்கருவிகளின் ஒலியோடு பூதகணங்களின் பாடலும் ஆடலும் கூடியதும், வேதங்கள் பயின்று அவ்வழி ஒழுகும் அந்தணர்களும் நிறைந்த திரு

மங்கலக்குடியில் எழுந்தருளிய குறைவிலா நிறைவே, குணம் இல் குணமே என்று போற்றி வேத ஆகம முறையால் வழிபடு பவர்கள் தொன்னெறியாகிய சிவநெறியின் பயனைக்காண்பர்.

குறைவிலா நிறைவு என்பது பரிபூரணன் பரமசிவனன்றி வேறின்மையை உணர்த்திற்று. என்றும் எதிலும் குறைவில் லாத நிறைவாக உள்ளவன் என்பதாம். திருவாசகம், கோயில் திருப்பதிகம், 5ம் திருப்பாடலில் ''குறைவிலா நிறைவே'' என்று மாணிக்கவாசகரும் அருளியிருப்பது காண்க.

குணம் இல் குணமே – இறைவன் ஸத்வ ராஜ தாமஸம் எனப்படும் மாயா காரிய முக்குணங்கடந்து நின்றவன். இம் மூன்று குணங்களுமின்மையால் குணமிலி எனப்படுபவன். அதனுல் ஒரு குணமும் இல்லாதவன் என்பதன்று. முக்குணத் திற்கு வேருய அருட்குணம் எட்டும் உடையவன். எனவே குணமில் குணமே என்ருர். எண் குணங்களாவன: தன்வயத்த னுதல், தூயவுடம்பினனுதல், இயற்கையுணர்வினனுதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களின் நீங்குதல், பேரரு ளுடைமை, முடிவில் ஆற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பனவாகும். இவ்வாறு சைவாகமத்துட் கூறப்பட்டுள்ளது (திருக்குறள் கடவுள் வாழ்த்து, 9ம் குறளையும் அதற்குப் பரி மேலழகர் உரைத்த உரையையும் காண்க). முன்னெறி – எல்லா நெறிகட்கும் முதன்மையான சைவநெறி. இங்கு நெறி காண்பார் என்பது அதன் பயனை அடைவார் என்பதை உணர்த்தியதாகக் கொள்க.

ஆனி லங்கிள ரைந்தும் அவிர்முடி யாடியோர்
மானி லங்கையி னுன்மண மார்மங் கலக்குடி
ஊனில் வெண்டலைக் கையுடை யானுயர் பாதமே
ஞான மாகநின் றேத்தவல் லார்வினை நாசமே. 5

5. பசுவினிடமிருந்து உண்டாகும் ஆனைந்து எனப்படும் ஐந்து பொருள்களாலும் திருமுடி மீது அபிடேகங்கொள்பவ னும், ஒரு மான் நிற்கும் அழகிய திருக்கரத்தினையுடையவனும் திருமங்கலக்குடியில் எழுந்தருளிய தசையற்ற வெள்ளைத்தலை

மினைக் கையில் உடையவனுமாகிய சிவபிரானது பெருமை பொருந்திய திருவடிகளையே வீடு பேறளிக்கும் ஞானமாகப் பாவித்து வழிபடவல்லவர்களது வினைகள் நாசமாகும்.

ஆனில் அம்கிளர் ஐந்து - பசுவினிடத்து உண்டாகிய பால், தயிர், நெய், கோமயம், கோசலம் என்ற ஐந்து பொருள்கள். பஞ்சகவ்யம் என்பது வடமொழி வழக்கு. பாதமே ஞானம் – திருவடி ஞானம். ஞானமே வீடு பேற்றினைத் தரவல்லது. அவ்வீடு பேறு திருவடிப்பேறு எனவும்படும். எனவே ஆன்மாவைத் திருவடியைச் சேரும்படி செய்யும் ஞானம் திருவடி ஞானம் எனப்பட்டது. இறைவரது திரு வடியைச் சேர்ந்தார் பிறவிக்கடல் நீந்துவர் என்று கூறும் திருக்குறள், கடவுள் வாழ்த்து, 10-ம் குறளையும் அதற்குப் பரிமேலழகர் தம் நுண்ணறிவு தோன்ற உரைத்துள்ள உரைப்பகுதியையும் இங்குக்கொள்க.

தேனு மாயமு தாகிநின் றான்தெளி சிந்தையுள்
வானு மாய்மதி சூடவல் லான்மங் கலக்குடி
கோனை நாடொறு மேத்திக் குணங்கொடு கூறுவார்
ஊன மானவை போயறும் உய்யும் வகையதே. 6

6. தெளிந்த சிந்தையுள் தேனும் அமுதுமாய் இனிக்க நின்றவனும், ஞானாகாசமாக அத்தெளிந்த சிந்தையைக் கொள்பவனும், சந்திரனைத் தலையிலே சூட வல்லானும், திரு மங்கலக்குடியில் எழுந்தருளியுள்ள முதல்வனுமான சிவ பெருமானை நாள்தோறும் வழிபட்டு அப்பெருமானது அருட் குணங்களைக் கொண்டு விளங்கும் தோத்திரங்களைக் கூறுப வர்களது பிறவிக்கேதுவாகிய மும்மலகாரியமாகிய குற்றங்கள் அறுந்து போகும். ஆன்மாக்கள் நற்கதி அடையும் வகை அதுவேயாகும்.

வேள் படுத்திடு கண்ணினன் மேருவில் லாகவே
வாள் அரக்கர் புரமெரித் தான்மங் கலக்குடி
ஆளும் ஆதிப் பிரானடி கள்ளடைந் தேத்தவே
கோளு நாளவை போயறுங் குற்றமில் லார்களே. 7

7. மன்மதனை அழித்த நெற்றிக் கண்ணை உடையவனும், மேருவை வில்லாகக்கொண்டு கொடிய அரக்கர்களது முப்புரங்களையும் எரித்தவனும், திருமங்கலக்குடியில் எழுந்தருளியிருந்து அடியார்களை ஆட்கொள்ளும் ஆதி முதல்வனுமாகிய சிவபிரானது திருவடிகளைச் சரண் அடைந்து வழிபட கிரகங்களாலும், விண்மீன்களாலும் உண்டாகும் தீமைகள் அகன்று போம். மற்றும் எவ்விதமான குற்றமுமற்றவர்களாவார்கள். கோள் — சூரியன் முதல் கேது ஈருகிய ஒன்பது கோள்கள். நாள்—அசுவினி முதல் ரேவதி ஈருகிய இருபத்தியேழு நட்சத்திரங்கள்.

பொலியு மால்வரை புக்கெடுத் தான்புகழ்ந் தேத்திட
வலியும் வாளொடு நாள்கொடுத் தான்மங் கலக்குடிப்
புலியின் ஆடையி ஞனடி யேத்திடும் புண்ணியர்
மலியும் வானுல கம்புக வல்லவர் காண்மினே. 8

8. திருக்கயிலாய மலையினைப் பெயர்த்தெடுக்க முயன்றவனை இராவணன் (வலியழிந்து) இறைவனைப் புகழ்ந்து தோத்திரம் செய்ய அவனுக்கு ஆற்றலையும், சந்திரகாசம் என்னும் வாளையும், மூன்று கோடி எனப்படும் நீண்ட வாழ் நாளையும் அருளியவனும், திருமங்கலக்குடியில் எழுந்தருளி உள்ள புலித்தோலை ஆடையாக உடையவனுமாகிய சிவபிரானது திருவடிகளை ஏத்தும் புண்ணியம் வாய்க்கப் பெற்றவர்கள் இன்பம் மிகுதலையுடைய அதாவது பேரின்பம் எனப்படும் வீட்டுலகினையடைதற்குரிய வன்மையுடையவர் ஆவார். முற்பிறவிகளில் புண்ணியம் செய்திருந்தாலன்றி இப்பிறவியில் சிவபெருமான் திருவடிகளையேத்தும் பேறு பெற மாட்டார்கள் என்பதை வலியுறுத்த ஏத்திடும் புண்ணியர் என்றருளிச் செய்தார்.

ஞால முன்படைத் தான்நளிர் மாமலர் மேலயன்
மாலுங் காணவொ ணுவெரி யான்மங் கலக்குடி
ஏல வார்குழ லாளொரு பாக மிடங்கொடு
கோல மாகிநின் ருன்குணங் கூறுங் குணமதே. 9

9. பிரமதேவனும் திருமாலும் காணவொண்ணுது எரியின் உருவமாகி நின்றவனும், திருமங்கலக்குடியில் மயிர்ச் சாந்து பூசிய நீண்ட கூந்தலுடைய உமாதேவியார் ஒரு பாகமாக இடங்கொடுத்த திருக்கோலத்துடன் நின்றவனுமாகிய சிவபிரானது திருவருட்குணங்களைக் கூறுங்கள். அதுவே குணமாகும். (மற்ற எதுவும் குணமாகா என்பதாம்.)

மெய்யின் மாசினர் மேனி விரிதுவ ராடையர்
பொய்யை விட்டிடும் புண்ணியர் சேர்மங் கலக்குடிச்
செய்ய மேனிச் செழும்புனற் கங்கை செறிசடை
ஐயன் சேவடி யேத்தவல் லார்க்கழ காகுமே. 10

10. உடலில் அழுக்குடையவர்களான சமணர்களும், உடலின் மீது போர்த்த துவர்நிற ஆடையுடையவராகிய பௌத்தர்களும் கூறும் பொய்யான வார்த்தைகளைக் கேளாது விட்டிடும் சிவபுண்ணியம் மிக்கவர்கள் வாழ்கின்ற திருமங்கலக்குடியில் எழுந்தருளிய செம்மேனி எம்மானும், வெள்ளப் பெருக்குடைய கங்கையாறு செறிந்த சடைமுடியையுடையவனுமாகிய சிவபிரானது சிவந்த திருவடிகளை ஏத்தவல்லார்க்குப் பேரின்ப வாழ்வு சித்திக்கும். ஐயன் — தலைவன், சிவபெருமானே தலைமைக் கடவுள் என்பதைக் குறித்தது. அழகு ஆகும் — அழகு என்பதற்குப் பேரின்பம் என்ற பொருள் கொள்ளப்பட்டது.

மந்த மாம்பொழில் சூழ்மங் கலக்குடி மன்னிய
எந்தை யையெழி லார்பொழிற் காழியர் காவலன்
சிந்தை செய்தடி சேர்த்திடு ஞானசம் பந்தன்சொல்
முந்தி யேத்தவல் லாரிமை யோர்முத லாவரே. 11

திருச்சிற்றம்பலம்

11. தென்றற் காற்று வீசும் பொழில்கள் சூழ்ந்த திருமங்கலக்குடியில் நிலைபெற்ற எந்தையாகிய சிவபிரானை, அழகு பொருந்திய பொழில்கள் நிறைந்த சீகாழித் தலைவனுகிய திருஞானசம்பந்தனது, இறைவர் திருவடிகளைச் சேர்த்

திடும் சொல்லாகிய, இப்பதிகத்தைச் சிந்தைசெய்து முதன்மை கொடுத்து ஏத்தவல்லவர்கள் தேவர்களுக்குத் தலைவர் ஆவர். இத்திருப்பதிகமும், பிள்ளையாரது ஏனைய திருப்பதிகங்களும் ஓதுபவர்களை இறைவர் திருவடியில் சேர்க்கும் ஆற்றல் பெற்றவை என்பது இப்பாடல் மூலம் உறுதிப்படுத்தப்படுகிறது. எனவே நாமும் இவற்றைத் தவருது ஓதுவோமாக.

சுவாமி—புராணேசுவரர்] [தேவி—மங்களநாயகி

சிவம்

---

சிவமயம்

## திருஞானசம்பந்தர் தேவாரப்பெருமை

திருச்சிற்றம்பலம்

திங்கள் கொழுந்தொடு பொங்கரவு கிளைக்கும்
கங்கைப் பேரியாற்றுக் கடுவரற் கலுழியின்
இதழியின் செம்பொன் இருகரை சிதறிப்
புதலெருக்கு மலர்த்தும் புரிபொன் சடையோன்
திருவருள் பெற்ற இருபிறப் பாளன்
முத்தீ வேள்வி நான்மறை வளர
ஐவேள் வுயர்த்த அறுதொழி லாளன்
ஏழிசை யாழை எண்டிசை அறியத்
துண்டப் படுத்த தண்டமிழ் விரகன்
காழி நாடன் கவுணியர் தலைவன்
மாழை நோக்கி மலைமகள் புதல்வன்
திருந்திய பாடல் விரும்பினர்க் கல்லது
கடுந்துயர் உட்புகக் கைவிளிக் கும்மிந்
நெடும்பிற விக்கடல் நீந்துவ தரிதே.

திருச்சிற்றம்பலம்

—நம்பியாண்டார் நம்பி

உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்

## வாழ்த்து

திருச்சிற்றம்பலம்

வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே.

திருச்சிற்றம்பலம்

— திருஞானசம்பந்தர் அருளியது

---



உ

சிவமயம்

ஸ்ரீ மஹாதேவஜயம்



**யத்யத் கர்ம கரோமி**

**தத்ததகிலம்**

**சம்போ தவாராதனம்**

Elango Achukoodam, 166, R. H. Road, Mylapore, Ms-4, Phone: 74121